ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ கூரேசாய நம:

# ஸ்ரீ கூரத்தாழ்வான் வைபவம்

“எம்பெருமான் (ஸ்ரீமந்நாராயணன்) பெருமையையும் வைபவத்தையும் பேசி முடித்து விடலாம், ஆனால் எம்பெருமானார் (இராமாநுசர்) வைபவத்தைப் பேசி முடிக்க முடியாது” என்று முதலியாண்டான், எம்பார் முதலானோர் சொல்லுவார்கள். “இராமாநுசர் வைபவத்தைக் கூட பேசி முடிக்கலாம், ஆனால் ஸ்ரீ கூரத்தாழ்வான் வைபவத்தைப் பேசி முடிக்கவே முடியாது” என்று சொல்லுவார்கள் நம் முன்னோர்கள்.

ஸ்ரீ கூரத்தாழ்வானோடு ஒப்பிடக் கூடியவர்களும் இவரைக் காட்டிலும் உயர்ந்தவர்களும் முன்னும் பிறக்கவில்லை, இவருக்கு பின்னாலும் பிறக்க போகிறதும் இல்லை. ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் வாழ்ந்து காட்டியவர் ஸ்ரீ கூரத்தாழ்வான். எம்பெருமானின் அருளால், ஸ்ரீ கூரத்தாழ்வான், தானே மீண்டும் இவ்வுலகில் பிறந்தாலும், முன்பு தான் வாழ்ந்து காட்டிய முறையில் மீண்டும் வாழ்ந்து காட்ட முடியுமா என்பது சந்தேகம் தான்.

நாம் அனைவரும் கடைபிடிக்க வேண்டிய சிறந்த குணங்களான ஜீவகாருண்யம் (எல்லா உயிர்களிடத்திலும் தயவுடனும்/அன்புடனும் இருத்தல்), குருபக்தி, பகவானிடத்தில் பக்தி, வைராக்யம் (பற்றின்மை), ஞானம், நல்லொழுக்கம், பொறுமை, நல்ல சிந்தனை, நல்ல அநுஷ்டானம் (பெரியோர்கள் வாழ்ந்து காட்டிய முறைப்படி வாழ்ந்து காட்டுதல்) ஆகிய அனைத்துக்கும் பிறப்பிடமானவர் ஸ்ரீ கூரத்தாழ்வான். இவ்வளவு பெருமை வாய்ந்த நல்லவர் வரலாற்றை நாம் தினமும் கேட்டு கடை பிடிக்க வேண்டும்.

## ஆழ்வானின் திருவவதாரம்

“பெருமாள் கோயில்” என்று அழைக்கப்படும் காஞ்சீபுரத்திற்கு வடமேற்கு திசையில் சுமார் 10 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள “கூரம்” என்கிற அழகிய கிராமத்தில் ஸ்ரீ கூரத்தாழ்வான் இற்றைக்கு ஆயிரமாண்டுகளுக்கு முன் - கலி 4109ம் ஆண்டு “ஸௌம்ய” வருஷத்தில் (ஆங்கிலம் 1010ம் ஆண்டு), “தை” மாதம், “ஹஸ்த” நக்ஷத்திரத்தில் இராமாநுசர் பிறப்பதற்கு 8 ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தார்.

## யாருடைய அவதாரம்

ஸ்ரீ வைகுந்தத்தில், நித்ய ஸூரிகளும், முக்தாத்மாக்களும், எம்பெருமானை எப்பொழுதும் அனுபவித்துக் கொண்டே இருக்கிறார்கள். பூலோகத்தில் உள்ள நாம் அனைவரும் இந்த அனுபவத்தை அடையத் தகுதி இருந்தாலும், நம்முடைய

வினைப்பயனால் அதை அடையமுடியாமல் பூலோகத்தில் உள்ளோம். இப்பூலோகத்தில் உள்ளவர்களைத் திருத்தி தனக்கு கைங்கர்யம் பண்ண வைக்கவும், நல்லோர்களைக் காக்கவும், அறத்தை நிலைநாட்டவும், துஷ்டர்களை (தீயவர்களை) அழிக்கவும் எம்பெருமான் எண்ணினான். அதற்காகத்தான் எம்பெருமான் "இராமன்", "கிருஷ்ணன்" முதலிய அவதாரங்களை எடுத்தான். எம்பெருமான் "இராமனாகவும்" பரமபதத்தில் எப்பொழுதும் அவனுக்கு கைங்கர்யம் பண்ணுபவரான "திருவனந்தாழ்வான்" (ஆதிசேஷன்), "லக்ஷ்மணனாகவும்" த்ரேதா யுகத்தில் அவதரித்தார்கள். அந்த சமயத்தில் லக்ஷ்மணன் 14 வருடம், தான் கைப்பிடித்த மனவியைப் பிரிந்து உண்ணாமலும், உறங்காமலும் இருந்து இராமனுக்கு சிறந்த தொண்டு செய்தான். லக்ஷ்மணன் பட்ட கஷ்டங்களை நினைத்து, தான் அவனுக்கு அடிமையாக இருந்து தொண்டு செய்ய வேண்டும் என்று எம்பெருமான் நினைத்தான். அதனால், த்வாபர யுகத்தில் எம்பெருமான் தம்பியாகவும் (கண்ணனாகவும்), ஆதிசேஷனான இளைய பெருமாள் தமையனாகவும் (பலராமனாகவும்) அவதரித்தார்கள். அப்பொழுது எஜமானனாக (பலராமனாக) பிறந்து கைங்கர்யம் கொள்வதை காட்டிலும், பணியாளனாகப் (கண்ணனாக) பிறந்து அடிமை செய்வது மிகவும் சிறந்த அனுபவமாக இருப்பதை எம்பெருமான் உணர்ந்தான். இருப்பினும் பலராமனுக்கு தான் எண்ணியபடி கைங்கர்யம் பண்ண முடியாமல் போயிற்று. அதனால், மறுபடியும் எம்பெருமான் அடிமை செய்பவனாகவே இருக்க வேண்டும் என்று நினைத்தான். அதன்படி, கலியுகத்தில் அடிமை செய்ய எம்பெருமானே கூரத்தாழ்வானாகவும அடிமை கொள்ள ஆதிசேஷன் எம்பெருமானாராகவும் அவதரித்தார்கள் என்று கூறுவர் பெரியோர். எப்படி எம்பெருமானின் திருமார்பில் ஒரு மறு(மச்சம்) உள்ளதோ, அதே போல் ஸ்ரீகூரத்தாழ்வானின் திருமார்பிலும் ஒரு மறு இருந்துள்ளது பிரசித்தமாகையால் அவருக்கு எம்பெருமான் திருநாமமான "ஸ்ரீவத்ஸசிஹ்நர் (திருமறுமார்பன்)" என்ற திருநாமம் இடப்பட்டது. ஸ்ரீகூரத்தாழ்வானின் தகப்பனார் பெயர் "அனந்தர்" என்கிற "கூரத்தாழ்வார்"

குறிப்பு : மரியாதைக்காக ஆழ்வானை "கூரத்தாழ்வார்" என்று கூறினால், அது அவருடைய தகப்பனாரைக் குறிக்கும். எனவே "ஸ்ரீ கூரத்தாழ்வான்" என்றே கூற வேண்டும். ஆழ்வானின் தாயார் பெயர் "பெருந்தேவி நாயகியார்", இவர்களுக்கு மகனாக "ஸௌம்ய" வருஷம், "தை" மாதம் "ஹஸ்த" நக்ஷத்திரத்தில், கிருஷ்ணபக்ஷம், பஞ்சமி திதி வியாழக்கிழமை அன்று ஆழ்வான் பிறந்தார்.

இவர் சிறு வயதிலேயே, வேதம், இதிஹாஸ புராணங்கள், ஆழ்வார்களின் பாசுரங்களாகிய திவ்ய பிரபந்தங்கள், இவை அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார். எம்பெருமானே அவதாரம் எடுத்திருப்பதால், இவருடைய ஞானத்தைப் பற்றியோ, அழகைப் பற்றியோ, அல்லது செல்வத்தைப் பற்றியோ நினைத்து ஆச்சரியப்பட வேண்டிய அவசியமே இல்லை. இவை அனைத்தும் இருந்தும், சிறிதும் செருக்கு இல்லாமல் வாழ்ந்து வந்தார்.

## ஆழ்வான் என்ற திருநாமம்

இவர் "**ஆழ்வான்**" என்கிற திருநாமம் பெற்றமைக்கு முக்கிய காரணம், பகவத் விஷயத்திலே (திருமாலின் கல்யாண குணங்களில்) மிகவும் ஆழ்ந்திருந்ததால் தான். ஒருமுறை, எம்பெருமானார் கூரத்தாழ்வானிடத்தில் திருவாய்மொழி அர்த்தத்தைக் கேட்க விரும்பினார். ஆனால், கூரத்தாழ்வானோ ஆசார்யன் (உடையவர்) திருவடிகளே உறுதுணை என்று இருந்தவர். அவர் சேஷத்வத்தின் (அடிமைத்தனத்தின்) எல்லையிலே நிற்பவர். அவர் தனது ஆசார்யனான உடையவருக்கு, தானே ஆசிரியர் போன்று பொருளுரைக்க ஒப்புக் கொள்ளமாட்டார். ஆகையால், மற்றொரு ஏற்பாடு செய்யப்பட்டது. அதாவது முதலியாண்டான் போன்றவர்களுக்கு ஆழ்வான் திருவாய்மொழியின் பொருளைச் சொல்ல வேண்டும் என்றும், அதை அவர்கள் கேட்டுக் கொண்டு அப்படியே எம்பெருமானாரிடம் சொல்ல வேண்டும் என்றும், ஏற்பாடு ஆகியது. அவ்வாறே அவர்களுக்கு "உயர்வற வுயர்நலமுடையவன்" என்ற திருவாய்மொழிக்கு அர்த்தம் கூறத் தொடங்கினார் கூரத்தாழ்வான். உடனே, அவர் மோஹித்து (மயங்கி) விழுந்து விட்டார். பிற சமய வாதிகள் (மற்ற சமயங்களைப் பின்பற்றி வாதிடுபவர்கள்) "ப்ரஹ்மத்திற்கு (திருமாலுக்கு) குணம் என்பதே கிடையாது, அது நிர்குணம் என்று உளறுகிறார்களே. அவர்களுடைய கழுத்தைப் பிடித்தாற்போலே, நம்மாழ்வார் முதல் வரியிலேயே "**உயர்வறவுயர் நல முடையவன்**" என்று கூறியுள்ளார். இதன் பொருளை நம்மாழ்வார் எவ்வளவு அழகாக கூறியுள்ளார் என்பதில் ஆழ்ந்து, கூரத்தாழ்வான் அதனுடைய அர்த்தத்தை மற்றவர்களுக்கு சொல்ல ஆரம்பிக்கும் பொழுதே மயங்கி விழுந்துவிட்டார். சீடர்கள் அனைவரும் உடனே எம்பெருமானாரிடம் ஓடி வந்து "காணவாரீர் காணவாரீர்" என்று அழைத்தனர். அவரும் ஓடிவந்து பார்த்து, சீடர்களிடம், "நம்மாழ்வார் திருவாய்மொழி அருளிச்செய்யும் பொழுது 'எத்திற முரலினோடிணைந்திருந்தேங்கிய யெளிவே (திருவாய்மொழி 1,3,1) என்று ஆறு மாதம் மயங்கி கிடந்தார். நமக்கு அதைப் பார்க்கும் பாக்கியம் கிடைக்கவில்லை. இன்று, அதே நம்மாழ்வாரைப் போல் இவர் மயங்கிக் கிடப்பதை நம் கண்ணாரக் காணும் பாக்கியம் பெற்றோமே" என்று குரல் தழுதழுக்கப் பேசினார்.

ஆழ்வானுக்கு அருகில் தான் நின்றிருப்பதை ஆழ்வான் உணருகிறாரா என்று பார்த்தார். ஆழ்வான், நம்மாழ்வாரின் அருளிச்செயலில் உருகி, ஆழ்ந்து மயங்கிக் கிடப்பதால், இராமாநுசர் வந்திருப்பதைக் கூட உணரவில்லை. உடனே இராமாநுசர் ஸ்ரீவத்ஸாங்கரிடம் அருகில் சென்று, "ஆழ்வான்! ஆழ்வான்!! ஆழ்வான்!!!" என்று கூவி, அவருடைய திருமுதுகைத் தட்டி உணர்த்தினர். உடனே சட்டென்று விழித்து எழும்பொழுதே "உயர்வற உயர்நல முடையவனென்பதே!" என்று சொல்லிக்கொண்டே துடுக்கென்றெழுந்தார். இதுவரையில் கூரத்தாழ்வானுக்கு "ஸ்ரீவத்ஸாங்கர்" என்ற பெயர்தான் இருந்து வந்தது. அன்று திருமாலின் திருக்கல்யாண குணங்களில் ஆழ்வாரைப் (நம்மாழ்வாரை) போல் உருக்கத்திலே ஆழ்ந்து இருந்ததால், இவரை இராமாநுசர், "**ஆழ்வான்**" என்று அழைத்ததால், அன்று முதலாக இவருக்கு "**ஆழ்வான்**"

என்ற திருநாமம் ஏற்பட்டது. மேலும் இவர் அவதரித்த இடம் **"கூரம்"** என்பதால் இவருக்கு **"கூரத்தாழ்வான்"** என்ற பெயர் ஏற்பட்டது.

## ஆழ்வான் செய்த திருமாலடியார் தொண்டு

இவர் நாம் வாழ வேண்டிய வாழ்க்கையை சிறுவயதில் இருந்தே வாழ்ந்து காட்டியவர். தமது தகப்பனாருக்குப் பிறகு இவரும், கூரமாநகரத்திற்கு அரசராக இருந்தார். ஒவ்வொரு தினமும் காலை முதல் இரவு வரை இறைஅடியார்களுக்கு "அன்னதானம்" செய்து வந்தார். ஒருமுறை பெருமாள் கோயிலில் (காஞ்சீபுரத்தில்) நடைபெறும் "கருடஸேவை" உத்ஸவத்தை சேவிப்பதற்காக, வடநாட்டில் இருந்து இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கூரத்திற்கு வந்தார்கள். அவர்கள் ஆழ்வான் திருமாளிகையில் நடக்கும் அன்னதானத்தில் சாப்பிட்டுவிட்டு காஞ்சிக்கு சென்றனர். ஆனால், ஆழ்வானோ கூரத்தை விட்டு கருடஸேவையை சேவிக்க வரவில்லை. நம்மில் பலர், ஆயிரம், பதினாயிரம் பொற்காசுகள் செலவழித்து, பல தூர தேசத்திலிருந்து, பல்லாயிரம் பேர் காஞ்சிக்கு வந்து "கருடஸேவை" ஸேவிக்கிறோம். ஆனால், பக்கத்தில் உள்ள கூரத்தில் வசிக்கும் இந்த கூரத்தாழ்வான் வரவில்லையே என்று அந்த இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களும் பேசிக்கொண்டு காஞ்சிக்கு வந்தனர்.

இவர்கள் காஞ்சி வந்தபொழுது இவர்களுக்கு வரதாஜப் பெருமாள் ஸேவை கொடுக்கவில்லை. பிறகு, அர்ச்சகர் முலமாக அவர்களிடம் பேசினார். "நீங்கள் இருவரும் கூரத்தாழ்வானிடத்தில் மனதினால் குற்றம் செய்தீர்கள். அவர், கூரத்தில் இருந்தபடி, என்னையும் என் உத்ஸவங்களையும் மனதார நினைத்துக் கொண்டே, என்னை சேவிக்க வரும் உங்களைப்போல் உள்ளவர்களுக்கு அன்னதானம் செய்து வருகிறார். காலை முதல் இரவு வரை அன்னதானம் செய்யும் அவருக்கு, காஞ்சிக்கு வந்து என்னை சேவிக்க இயலவில்லை. ஆகையால், நீங்கள் எனக்கு அடிமை செய்வதைக் காட்டிலும், என் அடியார்களுக்கு நன்மை செய்வது தான் எனக்கு மகிழ்ச்சியைத் தரும். எனவே, என்னை சேவிக்க வேண்டும் என்றால், முதலில் கூரம் சென்று கூரத்தாழ்வானை வணங்கி, நீங்கள் மனதால் செய்த குற்றத்திற்கு மன்னிப்பு கேட்டு வாருங்கள்"என்றார். அதன்படி, அவர்களும் மறுபடியும் "கூரம்" சென்று ஆழ்வானை வணங்கி நடந்தவற்றைக் கூறினார்கள். கருணையே வடிவான ஆழ்வானும் அவர்களைப் பார்த்து புன்முறுவல் செய்து, "மறுபடியும் நீங்கள் காஞ்சிக்குச் சென்று வரதராஜரை சேவியுங்கள், அவரும் சேவை தந்து உங்களைக் கடாக்ஷிப்பான்" என்றார். அவர்கள் மீண்டும் பெருமாள் கோயிலுக்கு (காஞ்சிக்கு) சென்றனர். வரதராஜனும் அவர்கள் கண்ணுக்கு சேவை தந்தார்.

இதில் சொல்லியபடி, பெருமாள் கோயிலில் வரதராஜனுக்கு எவ்வளவு உத்ஸவங்கள் நடந்தாலும், ஆழ்வான் அவ்விடத்திற்கு வருவதில்லை. "ஆராதனானாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராதனம் பரம், தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீயாராதனம் பரம்" என்கிற வசனத்தின்படி கூரமாநகரிலேயே திருமால் அடியார்களுக்கு "அன்னதானம்"

செய்து கொண்டிருப்பார். ஆகவே, நாம் அனைவரும் திருமால் அடியார்களுக்கு நம்மால் இயன்ற அன்னதானம் செய்து பெருமாளின் அருள் பெறுவோமாக.

## ஆழ்வானது மனைவியின் சிறப்பு

ஆழ்வானின் மனைவியின் பெயர் ஆண்டாள். ஆழ்வானைக் காட்டிலும் இவருக்கு சிறப்பு அதிகம். சாஸ்த்ரங்களிலும், அதன் அர்த்தங்களிலும் ஆழ்வானுக்கு ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால், தனது மனைவியிடம் கேட்பார் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அதைவிட முக்கியமான சிறப்பம்சம் ஒன்று உள்ளது. ஆழ்வான் எவ்வளவு பெரிய செல்வந்தராக இருந்தபோதிலும், அதை அனைத்தையும் துறந்து இராமாநுசரின் திருவடியை அடைந்த பொழுது (பின் பக்கங்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.) ஆழ்வானுடன் சென்ற ஆண்டாளின் வைராக்யத்தை அல்லவா காட்டுகிறது!

ஆழ்வான் அவதரித்த கூரம் என்கிற இடம், பழங்காலத்திலே கூரமாநகர் என்று பிரசித்தி பெற்ற ராஜ்யமாக இருந்தது. அதில் இவர் தாமே அரசாட்சி செய்து வந்தார். ஒரு நாள் இரவு நகர்வலம் வந்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு வீட்டில் கதவை தாளிட்டு சிலபேர் பேசிக்கொண்டிருந்தார்கள். உண்மையை அறிய, ஆழ்வான் அவர்கள் வீட்டின் திண்ணையில் அமர்ந்து கவனித்துக்கொண்டிருந்தார். அவர்கள் அந்த வீட்டில் இருந்த வீட்டுத்தலைவரின் பெண்ணைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசியதாவது, “இந்தப் பெண்ணின் ஜாதகப்படி அவளை மணம் புரிபவன், திருமணம் ஆன சிறிது காலத்திலேயே இறந்து விடுவான். இதை அறிந்த யாரும் இந்தப் பெண்ணை மணம் புரிய முன் வரவில்லையே”, வயதிற்கு வந்த அந்த பெண்ணை வீட்டில் வைத்து இருந்தால் உலகம் பழிக்குமே. எனவே, இவளைக் கொன்று விடுவதே நல்லது என்று பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டார். மறுநாள் அவர்களை ராஜசபைக்கு வரவழைத்து, முதல் நாள் இரவு உங்கள் வீட்டில் பேசிக் கொண்டிருந்ததை சொல்ல வேணும் என்று கேட்டார். அவர்களும், ஒன்றையும் மறைத்திடாது உள்ளபடியயே சொன்னார்கள். ஆழ்வான் அதைக்கேட்டு, குடிமக்களின் வருத்தத்தைத் தீர்ப்பது அரசருக்கு கடமை ஆகையால், உங்கள் பெண்ணை நான் மணந்து உங்கள் வருத்தத்தைத் தீர்க்கிறேன் என்று அறுதியிட்டார். பெண்ணின் பெற்றோர்கள் “தேவரீர் மணந்தால் அவள் ஜாதகப்படி தேவரீர் உயிர்மாய நேரிடுமே. இந்தநாடு ராஜா இல்லாமல் ஆகிவிடுமே” என்று வருத்தம் தெரிவித்தார்கள். அதற்கு ஆழ்வான் “நான் சிற்றின்பத்தை விரும்பினால் அன்றோ அப்படிப்பட்ட தீங்கு விளையும். எனக்கு சிறிதும் விருப்பமில்லை. விவாஹத்திற்கு இரண்டு பலன்கள் உண்டு. அவையாவன, ‘தர்மத்தை நிலைநாட்டுவதும்’, ‘குழந்தைச் செல்வங்கள் பெற்றுக் கொள்ளுவதும்’ ஆகும். நான் தர்மத்தை நிலைநாட்டுவதற்காக மணந்து கொள்கிறேன், என்று சொல்லி அந்தப் பெண்ணை மணந்து கொண்டார். இதனால் ஆழ்வானின் கீழ்க்கண்ட நல்ல குணங்கள் வெளிப்படுகின்றன. 1.ராஜாவாக இருப்பவன் குடிமக்களின் விருப்பத்தை நிறை வேற்றவேண்டும். 2.சிற்றின்பத்தில் பற்று

இல்லாமை. 3.சாதாரண குடும்ப விருத்தியைக் காட்டிலும் விசேஷ தர்மமான தர்மாநுஷ்டமானமும் முக்கியம். 4. ஜீவஹிம்ஸை (உயிர்களை வதைத்தல்) தவிர்த்தல்.

## செல்வத்தைத் துறந்து இராமாநுசனை சரணம் அடைதல்

கூரத்தில் இவருடைய திருமாளிகை (வீடு) தேவேந்திரபவனம் ("இந்திரன்" திருமாளிகை) குபேரபவனம் ("குபேரன்" திருமாளிகை) ஆகியவற்றை விடச் சிறந்ததாக இருந்தது. உதாரணமாக, இவரின் திருமாளிகையில் உள்ள வாசல் கதவுகளில் சிறந்த மணிகள் தொங்க விடப்பட்டிருக்கும். இந்த கதவுகளை மூடும் பொழுது, அதன் மணிகளின் ஓசை ஒரு யோஜனை தூரம் (சுமார் பத்து கிலோமீட்டர்) கேட்கும் என்றால், இவரின் செல்வத்தைப் பற்றி என்ன வென்று கூறுவது! அச்சிறந்த செல்வத்தைக் கொண்டு, ஏழைகளுக்கும், மற்றும் ஸாதுக்களுக்கும், பலருக்கும் பல வகையான உதவிகளையும், அன்னதானத்தையும் தினமும் செய்து வந்தார்.

தினந்தோறும், காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் ஸந்நிதியில் இரவில் கடைசியாக நடக்கும் பூஜை முடிந்தபிறகு, அக்கோயிலின் பெரிய கோபுர வாசல் கதவு மூடப்பட்ட பிறகே ஆழ்வான் திருமாளிகை வாசல் கதவு மூடுவது வழக்கம். ஒருநாள், வரதராஜப் பெருமாள் ஸந்நிதியில் நடந்து கொண்டிருந்த மஹோத்ஸவத்திற்காக கடைசி பூஜை தாமதமானது. குறிப்பிட்ட நேரத்தில் வாசல் கதவு மூடப்படவில்லை. ஆழ்வானின் திருமாளிகை காவலர்களுக்கு இச்செய்தி தெரியாமல் இருந்தது. அவர்கள் தினசரி கதவு மூடும் நேரத்தில், வரதராஜப் பெருமாள் கதவு மூடுவதற்கு முன், ஆழ்வானின் திருமாளிகை கதவுகளை மூடினார்கள். கதவுகளை மூடும் பொழுது, அதிலிருந்த மணிகளின் ஓசை வரதராஜப் பெருமாளின் காதுகளில் ஒலித்தது. அதனைக் கேட்ட வரதராஜப் பெருமாள், தனக்கு அந்தரங்கமாக விசிறி வீசிக் கொண்டிருந்த திருக்கச்சி நம்பியை நோக்கி, "நம்பீ! இது என்ன! நம்முடைய கடைசி பூஜை முடிந்த பின்னரே நம் கோயில் கோபுரவாசல் கதவு மூடப்படுவது வழக்கமாகும். அதற்கு முன்னரே ஏன் மூடிவிட்டார்கள்" என்று கேட்டார். வரதராஜப்பெருமாளின் கேள்விக்கு திருக்கச்சிநம்பி பதில் கூறினார். "நம்முடைய வாசல் கதவு இதுவரை மூடப்படவில்லை. இவ்வோசை நம் கதவுகளில் இருந்து வரவில்லை. இவ்வோசை தூரத்தில் இருந்து கேட்கிறது. கூரம் என்கிற கிராமத்தில் உள்ள ஸ்ரீ கூரத்தாழ்வானின் அரண்மனை வாசல் கதவுகளை மூடும் ஓசை தான் இது" என்று பதில் கூறினார். வரதராஜப் பெருமாள் சிரித்து "ஆழ்வானது செல்வமோ நம்மை இங்ஙனே மயக்கியது!!" என்று ஆச்சர்யப்பட்டார்.

இங்ஙனமாக வரதராஜப் பெருமாளுக்கும் திருக்கச்சி நம்பிக்கும் நடந்த ஸம்வாதம் ஸ்ரீகூரத்தாழ்வானுக்கு செய்தியாக எட்டியது. இச்செய்தியைக் கேட்டவுடன், "வரதராஜனின் செல்வத்தை அளவிட பிரம்மா முதலியவர்களும் சக்தியற்றவர்களாய் இருக்க, அவனுடைய படைப்பில் புழு போன்று இருக்கிற என்னுடைய செல்வத்தைக் கண்டு எம்பெருமான் அதிசயிப்பது கூடுமா? இது இந்த ஆத்மாவின் தன்மைக்குத் தகுமோ என்று நினைத்து இச்செல்வத்தைத் துறக்க வேண்டும்" என்று முடிவு செய்தார்.

தம்முடைய செல்வங்களை நல்லோருக்கு தானமாக கொடுத்துவிட்டார். தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்காக சிறிதளவு செல்வத்தைமட்டும் வைத்துக்கொண்டார். மற்ற செல்வத்தைத் துறந்து ஒரு நல்லாசிரியரை அடிபணிய வேண்டும் என்று எண்ணினார். நம்முடைய விசிஷ்டாத்வைத கொள்கையை நிலைநாட்டிய "இராமாநுசர்", வரதராஜரின் திருவடியை அடைந்து, ஸந்யாஸி கோலம் பூண்டு "இராமாநுச முனி" என்ற திருநாமத்துடன் எழுந்தருளி இருக்கிறார், என்ற செய்திகளை கேட்ட ஸ்ரீகூரத்தாழ்வான், தம்முடைய செல்வங்களைத் துறந்து, காஞ்சி மாநகருக்கு எழுந்தருளி, இராமாநுசரின் திருவடியை அடைந்தார். இராமாநுசரிடம் "பஞ்சஸம்ஸ்காரம்" (ஸமாஸ்ரயணம்) செய்து கொண்டார். இராமாநுசரின் நிழலைப் போல, ஒரு நிமிடமும் அவரைப் பிரியாமல், அவருக்குக் கைங்கர்யம் செய்து வந்தார். அனைத்து சாஸ்த்ரங்களையும், ஸம்ப்ரதாயங்களையும் அறிந்து கொண்டு, மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்துக் கொண்டு இருந்தார்.

## திருவரங்க மாநகர் சேர்தல்

இப்படியிருக்கும் நாளிலே ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளி இருக்கும் 'நம்பெருமாள்' இராமாநுசரை ஸ்ரீரங்கத்திற்கு வரவழைக்க வேண்டும் என்று எண்ணினார். அதன்படி, திருவரங்கப் பெருமாளரையர் என்பவரை காஞ்சி மாநகருக்கு அனுப்பி வைத்தார். அவரும் வரதராஜப் பெருமாளை சேவித்து, "நம் இராமாநுசனை நம்பெருமாள் ஸந்நிதிக்குத் தர வேண்டும்" என்று கேட்டார். அவரும் இராமாநுசனை ஸ்ரீரங்கத்திற்கு அரையருடன் அனுப்பி வைத்தார். இராமாநுசனை ஒரு காலும் பிரியாத கூரத்தாழ்வானும் அவர்களுடன் புறப்பட்டு திருவரங்கம் சென்றார். இராமாநுசரின் திருவடிக்கீழ் பிரதான சிஷ்யராய் திகழ்ந்து வந்தார். அனைத்து சாஸ்த்ர வித்தகராய் அனைவராலும் போற்றப் பெற்றவராய் வாழ்ந்து வந்தார்.

## சரமச்லோகார்த்தம் பெறுதல்

ஸ்வாமி இராமாநுசர் சரமச்லோகத்தின் அர்த்தத்தைப் பெறுவதற்காக திருக்கோட்டியூர் சென்று "திருக்கோட்டியூர் நம்பி" யிடம் வேண்டினார். நம்பியோ யாரையும் ஆராய்ச்சி செய்யாமல் விஷயத்தை கொடுக்க மாட்டார். இராமாநுசரையும் சோதித்து பார்த்தார். பலதடவை திருக்கோட்டியூருக்கு வரச்செய்தார். இராமாநுசரும் 17 தடவை சென்றும் விஷயத்தை நம்பி சொல்லவில்லை. 18வது தடவை நம்பி இராமாநுசருக்கு சரமச்லோகத்தின் பொருளை உபதேசித்தார். திருக்கோட்டியூர் நம்பி இராமாநுசரைப் பார்த்து, "உம்மையே பல தடவை பரீட்சை செய்த பிறகே இந்த உயர்ந்த பொருளைச் சொன்னேன். நீர் இந்த ரகசியத்தை ஒருவர் காதிலும் படாதபடி காப்பாற்றிக்கொண்டிரும்" என்று உத்தரவிட்டார். அதற்கு எம்பெருமானார், "தலையிலே அணியும் உயர்ந்த ரத்தினம் போன்ற, பரம பாகவதரான கூரத்தாழ்வானுக்கு மட்டும் இந்த உயர்ந்த பொருளை வெளியிட முடியாமல் என்னால் இருக்க முடியாதே", என்று சொன்னார். அதற்கு, திருக்கோட்டியூர் நம்பி, "ஆழ்வானுக்கு இவ்வர்த்தம் கேட்க தகுதி

இருந்தாலும், அவருடைய திடநம்பிக்கையை ஒருவருட காலம் அடிமை கொண்டு பரீட்சை செய்த பிறகு சொல்லவும்'', என்று கூறினார். இதை இராமநுசரும் ஆழ்வானிடம் கூறினார். இந்த உடல் ஒருவருட காலம் நிலையற்றது என்பதை அறிந்தவர் ஆழ்வான். மேலும், இந்த உயர்ந்த சரமச்லோகத்தின் பொருளை அறிந்தால்தான் உயிருடன் இருக்க முடியும் என்பதை உணர்ந்தார். எனவே, அதன் பொருளை உடனே அறிய ஆசையுடன் இருந்தார். மேலும், சாஸ்த்ரங்களில் நுட்பமானதைக் கற்றுத் தெளிந்த ஆழ்வான், "ஆசார்யன் திருமாளிகை வாசலில் ஒரு மாத காலம் பட்டினி கிடந்தால், அதுவே ஒரு வருட காலம் ஆசார்யனுக்கு அடிமை செய்வதற்கு சமம்'', என்பதை அறிந்தவர் ஆழ்வான். அதன்படி, ஒரு மாத காலம் இராமாநுசரின் திருமாளிகை வாசலில் பட்டினி கிடந்து, அந்த உயர்ந்த பொருளை இராமாநுசரிடம் பெற்றார்.

## பொன்வட்டில் எறிதல்

இவ்வாறே இராமாநுசரின் திருவடியிலேயே பரம பக்தராய் திருவரங்கத்தில் வசித்து வந்தார். அப்பொழுது, தம்முடைய பிறந்த ஊரான கூரத்தில் தன்னுடைய கடைசி கால வாழ்க்கையை நடத்துவதற்காக தான் சேமித்து வைத்த சிறிதளவு செல்வம் ஞாபகத்திற்கு வந்தது. அவ்வாறு சேமித்து வைப்பது நம்முடைய தன்மைக்கு விரோதமானது என்பதை உணர்ந்தார். உடனே புறப்பட்டு "கூரம்'' சென்றார். மீதம் வைத்து விட்டு வந்த சிறிதளவு செல்வத்தையும் உயர்ந்த பாகவதர்களுக்கு விநியோகம் செய்தார். பின்பு காஞ்சிபுரம் சென்று ஸ்ரீ வரதராஜப் பெருமாளை வழிபட்டு, திருவரங்கம் நோக்கி தனது மனைவி ஆண்டாளுடன் புறப்பட்டார். போகும் வழியில், மதுராந்தகம் அருகில், ஒரு காட்டு மார்க்கமாக ஒரு இரவுப் பொழுது செல்ல நேரிட்டது. அப்பொழுது ஸ்ரீ ஆண்டாள் ஆழ்வானைப் பார்த்து , "ஸ்வாமி எனக்கு பயமாய் இருக்கிறது'' என்றாள். அதற்கு ஆழ்வான், "மடியில் கனம் இருந்தால் அன்றோ வழியில் பயம் உண்டாகும், அப்படி ஏதாவது உன்னிடத்தில் இருக்கிறதா?'' என்று கேட்டார். அதற்கு ஆண்டாள், "தினமும் தாங்கள் தங்க வட்டில் பாத்திரத்தில் உணவு உண்டு வந்தீர். அதுவும் இல்லை என்றால் இலையில் உணவு உண்பது வருத்தமாக இருக்குமே! அதனால், தாங்கள் உணவு உண்பதற்காக ஒரே ஒரு பொன் வட்டிலை மாத்திரம் மீதி வைத்திருந்தேன். அதை மட்டும் மடியில் வைத்துள்ளேன்'' என்றாள். அதைக் கேட்ட ஆழ்வான், ஆண்டாளிடம் இருந்த பொன்வட்டிலை வாங்கி காட்டில் புதரிலே தூக்கி எறிந்துவிட்டு, "இனிமேல் பயம் இல்லையே'' என்று வழிநடந்தார். இப்பெருமையைத்தான், ஆழ்வானின் வாழி திருநாமத்தில் "பொன் வட்டில் தனையெறிந்த புகழுடையோன் வாழியே'' என்று நாம் சேவிக்கிறோம். மேற்கொண்டு நடந்து சென்று மதுராந்தகத்தில் ஏரிகாத்த இராமரை ஸேவித்தார். அத்திருக்கோவிலில் உள்ள மகிழமரத்தடியில் சென்று, 'எம்பெருமானாருக்கு ஸமாச்ரயணம் ஆன இடமாகையால், த்வயம் விளைந்த மண்', என்று ஸேவித்து மகிழ்ந்தார். மேற்கொண்டு பயணத்தைத் தொடர்ந்தார். வழியில் உள்ள திருப்பதிகளை (திவ்ய தேசங்களை) சேவித்துக் கொண்டு திருவரங்கம் வந்து சேர்ந்தார். முன்பு போல் உடையவர் திருவடியில் முக்கிய சீடராய் வாழ்ந்து வந்தார். இதன்படி, ஆழ்வானுக்கு செல்வத்தில் பற்றில்லாமை புலப்படுகிறது.

## திருவரங்கத்தமுதனாரை திருத்திப் பணிகொள்ளுதல்

அக்காலத்திலே, ஸ்ரீரங்கம் கோயிலில் உள்ள உள்துறை ஊழியர்களுக்குத் தலைவராக இருந்தவர் திருவரங்கத்தமுதனார். அவர் ஒரு நாள் உடையவரை ஸேவித்து, “பல பாவங்கள் செய்த என்னைத் திருத்தி, உமக்கு அடிமையாக்கும் படிக்கு, ஒரு ஆசார்யனை நியமிக்க வேண்டும்” என்று விண்ணப்பம் செய்தார். உடனே உடையவர் ஆழ்வானை அழைத்தார். அமுதனாரைக் காட்டி, “இவர் நம்பெருமாள் கைங்கர்யங்களுக்குத் தலைவராய் இருப்பவர். இவரது தாழ்வுகளைப் பாராமல், இவரைத் திருத்திப் பணி கொள்ள வேண்டும்” என்று கூறினார். ஆழ்வானும் அவ்வாறே அமுதனாருக்கு ஆறுமாத காலம், நல்ல ஞானத்தையும் நம்முடைய ஸம்ப்ரதாயத்தையும், ஆசார்யன் திருவடியே நாம் உய்ய சிறந்த வழி என்பதையும் கற்றுக் கொடுத்தார். பின்பு உடையவரிடம் கூட்டிச் சென்று, அவருடைய திருவடிகளைக் காட்டிக் கொடுத்தார். உடையவரும், ஆழ்வானையே அமுதனாருக்கு ஆசார்யனாக நியமித்தார். அவ்வாறே அமுதனார் கூரத்தாழ்வானின் சிஷ்யனாக மாறினார் என்பது சரித்திரம். இவ்வமுதனார் இராமாநுச நூற்றந்தாதியில்

“மொழியைக் கடக்கும் பெரும் புகழான், வஞ்சமுக்குறும்பாம் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான்” என்று ஆழ்வானின் பெருமையை அருளிச் செய்தார்.

ஸ்ரீரங்கம் கோவிலுக்கு புரோகிதரான “பெரியகோயில் நம்பி”யைத் திருத்திப் பணிகொள்ள நினைத்த பெரிய பெருமாள், உடையவரின் கனவில் ஒரு ஸ்ரீவைஷ்ணவராய் வந்து, “பெரியகோயில் நம்பி வெகுகாலமாக என்னை நம்பி இருக்கிறார். அதை மனதில் கொண்டு ஏற்பாடு செய்யவும்”, என்று கூறினார். உடனே, உடையவர் கண்விழித்து ஆழ்வானை அழைத்து, அவரிடம், “நம்பெருமாளுக்கு பெரியகோயில் நம்பியை விட மனமில்லை” என்று கூறினார். (உடையவர் மற்ற யாவரையும் கூப்பிடாமல், ஆழ்வானை மட்டும் அழைத்ததில் இருந்து, அவர் ஆழ்வானை விட்டு ஒரு நிமிடம் கூட பிரியாமல் இருக்க நினைப்பவர் என்று தெரிகிறது). அதற்கு ஆழ்வான், “பெரியகோயில் நம்பியை பெருமாளே அநுகூலராக்கி ஸ்வாமி திருவடிகளிலே ஆச்ரயிக்கும்படி பண்ணி அருள வேண்டும் என்பதே நினைவாக இருக்கும்”என்று கூறினார். அதற்கு இராமாநுசர், “ ஆகில் நீரே திருத்தும் என்று ஆழ்வானிடம் விண்ணப்பிக்க” அதன்படி, ஆழ்வானும் பெரியகோயில் நம்பியை திருத்தி உடையவர் திருவடிகளை சேர வைத்தார். மேற்கண்ட “கோயில்ஒழுகு” ஐதிஹ்யத்தினால், ஆழ்வான் திருத்தி எம்பெருமானார் திருவடிகளை சேரும்படி செய்து வைத்தார் என்பது புலப்படுகிறது. எம்பெருமானாரும் பெரிய கோயில் நம்பியை ஆழ்வான் திருத்தினபடியால் ஆழ்வானிடம் ஆச்ரயிக்கும்படி செய்து வைத்தார். என்னே ஆழ்வான் பெருமை! உடையவரும் நம்பியைக் கடாக்ஷித்து, க்ருபை பண்ணியருளினார். நம்பியும், உடையவரைப் போற்றி, “இராமாநுசநூற்றந்தாதி” என்னும் ப்ரபந்தத்தை தமது அமுத வாக்கினால் பாடினார்.

## ஆழ்வான் திருவரங்கத்தமுதனார் வீட்டில் "ஏகாஹம்" அமுது செய்தல்

இவ்வாறே அமுதனார் ஆழ்வான் திருவடிகளிலே அந்தரங்க சீடராய் இருந்து வருகிற காலத்தில், அமுதனாரின் தாயார் ஆசார்யன் திருவடி அடைந்தார் (இயற்கை எய்தினார்). அதற்காக 13 நாட்கள் கைங்கர்யம் (கார்யம்) செய்ய வேண்டும். 10ம் நாள் தசாஹம் முடிந்து 11ம் நாள் ஏகாஹம் என்கிற ஒரு சிராத்தம் (ஒரு சடங்கு) செய்ய வேண்டும். இந்த கைங்கர்யத்திற்கு ஸ்வாமியாக இருக்க பொதுவாக யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். எனவே அமுதனார் உடையவரிடம் சென்று "என்னுடைய தாயாரின் ஏகாஹம் கைங்கர்யத்திற்கு ஒரு ஸ்வாமியைக் காட்டிக் கொடுக்க வேண்டும்", என்று விண்ணப்பம் செய்தார். உடையவரும் ஆழ்வானை நோக்கி, "நீர் செல்ல வேண்டும்" என்றார். ஆழ்வானும், ஒரு பதிலும் கூறாமல், ஆசார்யன் ஆணையாகையால், மறுக்காமல் ஏற்றுக்கொண்டு, சென்று நீராடி, திருமண்காப்பு சாத்திக்கொண்டு, ஏகாஹம் ஸ்தானத்தில் எழுந்தருளினார். ஆழ்வானை அனுப்புவதற்கு முன்பு ஆழ்வானிடம் "ஏகாஹம் முடிந்தவுடன் அமுதனார் உமக்கு சில பொருள்களை காணிக்கையாக கொடுப்பார். பின்பு "உமக்கு எல்லாம் திருப்தி தானே" எனக் கேட்பார். நீர் 'இல்லை' என்று சொல்ல வேண்டும். ஸ்ரீரங்கம் திருக்கோயிலின் திறவுகோல் (சாவி) அமுதனாரிடம் உள்ளது. அச்சாவியை நாம் பெற்றால்தான் இத்திருக்கோயிலைச் சீர் செய்யமுடியும். எனவே அச்சாவியை கொடுத்த பிறகே "எனக்கு திருப்தி" என்று சொல்ல வேண்டும், அப்பொழுது தான் ஏகாஹம் கைங்கர்யம் பூர்த்தி அடையும்" என்று கூறினார்.

ஆழ்வானும் அவ்வாறே ஏகாஹம் ஸ்தானத்தில் இருந்தார். சாப்பிட்டு முடிந்த உடன் அமுதனார் ஆழ்வானுக்கு பெரும் பொருளை ஸமர்ப்பித்தார். ஆழ்வானை நோக்கி, ஸ்வாமிக்கு அனைத்தும் திருப்திகரமாக உள்ளதா? என்று வினவினார். ஆழ்வான் பதிலாக, "எமக்கு திருவரங்கநாதனின் திருக்கோயில் சாவியை தந்தருளினால் திருப்தியாக இருக்கும்" என்றார். அமுதனாரும் தம்முடைய தாயாரின் ஏகாஹம் கைங்கர்யம் பூர்த்தி அடைய வேண்டும் என்பதால் அச்சாவியை ஆழ்வானிடம் ஸமர்ப்பித்தார். ஆழ்வானும் அதைப் பெற்றுக் கொண்டு "ஸகலம் ஸம்பூர்ணம்" என்று சொல்லி ஏகாஹம் கைங்கர்யத்தை பூர்த்தி செய்தார்.

அமுதனார் வீட்டை விட்டு தெருவிற்கு வந்து, அமுதனார் கொடுத்த அனைத்துப் பொருளையும் தானம் செய்தார். காவிரிக்குச் சென்று நீராடி திருமண்காப்பு சாத்திக் கொண்டு திருக்கோயிலின் சாவியை எடுத்துச் சென்று உடையவரை வணங்கி ஸமர்ப்பித்தார். உடையவர் ஆழ்வானை நோக்கி, "அங்கே கிடைத்த அர்த்தம் (பொருள்கள்) எங்கே, என்று கேட்டார். அதற்கு ஆழ்வான் அவை அனைத்தும் அநர்த்தமாகையாலே (பொருள்களை சேமித்தல் நம் ஸ்வரூபத்திற்கு ஆகாது) கைகழிந்து போயின என்றார். உடையவரும் ஆழ்வானைப் பார்த்து "இதுவல்லவோ ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்", என்று பெருமை அடைந்தார்.

ஆழ்வான் கொடுத்த சாவியைப் பெற்றுக் கொண்டு, இராமானுசர் நம்பெருமாள் ஸந்நிதி கைங்கர்யங்களை முறைப்படுத்தினார். தென்னரங்கன் செல்வத்தைத் திருத்திய எம்பெருமானாருடைய இந்த ஆணையையே "ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்", என்று இன்றளவும் நாம் போற்றுகிறோம். அதாவது, இராமானுசர் திருவரங்கம் கோயில் கைங்கர்யங்களை முறைப்படுத்தி, சீர்செய்து செப்பனிட்டதால் தான், இன்றளவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. உடையவரின் வாழித் திருநாமத்தில் "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே" என்று வருகிறது. அந்த செல்வம் கிடைக்க காரணமாக இருந்தவர் ஆழ்வான் ஆகையாலே, இன்றளவும் ஸ்ரீரங்கச் செல்வம் தழைத்து இருப்பதற்கு மூலகாரணமாக இருந்தவர் ஆழ்வானே போலும். ஆசார்யனின் கட்டளை எதுவாக இருந்தாலும் அதை செய்வது ஸ்ரீவைஷ்ணவனின் கடமை என்பதை இவ்வாறு ஆழ்வான் உணர்த்தினார்.

## ஆளவந்தாரின் மனோரதமும் ஸ்ரீ பாஷ்யமும்

ஆளவந்தாரின் உயிர் பிரிந்த உடலை காவிரிக் கரையில் திருப்பள்ளிப்படுத்தும் போது, மூன்று விரல்கள் மடங்கிக் கிடந்தன. அதற்கான காரணங்களாக ஆளவந்தாரின் மூன்று மனோரதங்களை (ஆசைகளை), அங்கு வந்த இராமானுசரிடம் அம்மஹானின் சீடர்கள் கூறினார்கள். இராமானுசரும் அவருடைய இரண்டாவது ஆசையையும், மூன்றாவது ஆசையையும் சுலபமாக பூர்த்தி செய்தார். ஆளவந்தாரின் முதல் ஆசையாக "வேதவ்யாசர் எழுதிய ப்ரஹ்மஸூத்ரத்திற்கு போதாயனர் உரை எழுதி உள்ளார். பிரஹ்மஸூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைத மதத்தின் படி ஓர் பாஷ்யம் (விளக்கவுரை) இட வேண்டும்", என்பதாகும். அதுவே, உடையவர் ஸ்ரீ பாஷ்யத்தை ஸாதித்ததற்குக் காரணமாகும்.

## ஆழ்வான் வ்ருத்தி க்ரந்தத்தை தரித்துக் கொள்ளுதல்

ஆளவந்தாரின் முதல் மனோரதத்தை பூர்த்தி செய்வதற்காக ஸ்ரீபாஷ்யம் (விளக்கவுரை) எழுத வேண்டும் என்றால் அந்த "போதாயன வ்ருத்தி க்ரந்தத்தை" பார்க்க வேண்டும். ஆனால் அந்த புத்தகம் காஷ்மீரில் உள்ள ஸாரதாபீடத்தில் உள்ளது. அந்த புத்தகத்தை எடுத்து படிப்பதற்காக ஆழ்வானையும் கூட்டிக் கொண்டு காஷ்மீருக்கு உடையவர் சென்றார். ஸாரதா பீடத்திற்கு சென்று போதாயன விருத்தி க்ரந்தத்தை படிக்க வேண்டும் என்று கேட்டு கொண்டார். அங்குள்ளவர்கள் சுலபமாக பார்க்க விடவில்லை. இராமானுசரை வாதப் போருக்ககாக அழைத்தனர். வாதப் போரில் எல்லாரையும் வென்றார். ஸரஸ்வதி பீடத்தின் தலைவர் உள்ளம் மகிழ்ந்து போதாயன வ்ருத்தி க்ரந்தத்தை எடுத்து இராமாசரின் கைகளில் கொடுத்தார். இராமானுசரும் அப்புத்தகத்தை பெற்றுக் கொண்டு படித்துக் கொண்டிருந்தார். மேதாவியான ஆழ்வான் எம்பெருமானார் அந்த க்ரந்தத்தை பூர்த்தியாக பார்ப்பதற்கு முன்பே அனைத்து அத்யாயங்களையும் (பாகங்களையும்) படித்து நெஞ்சில் தேக்கிக் கொண்டார். உடையவர் முதல் அத்யாயம் பார்த்து முடித்த உடனே, அங்குள்ளவர்களின் தவறான அறிவுரையினால் மனம் கலைக்கப்பட்ட தலைவர் புத்தகத்தைப் பிடுங்கி உள்ளே வைத்து விட்டார். இராமானுசருக்கு மனதில் அபாரமாக

வருத்தம் ஏற்பட்டது. ஐயகோ! இந்த புத்தகத்தை எவ்வளவு சிரமப்பட்டு பெற்றுக் கொண்டு வந்தோம்! இதென்ன நம் கைக்கு கிடைத்த புத்தகத்தை தொலைத்துவிட்டு நிற்கிறோமே! நாம் ஒரு ஸ்ரீவைஷ்ணவனா! இனி இந்த ஸ்ரீவைஷ்ணவத்திற்கு நம்மால் ஒன்றும் பண்ணமுடியாது போலிருக்கிறதே! ஆளவந்தாரின் முதல் ஆசையை பூர்த்தி பண்ண முடியாது போல் இருக்கிறதே! என்று அபாரமாக இராமாநுசர் வருத்தப்பட்டார். அன்று வரையில் இராமாநுசர் அப்புத்தகத்திலுள்ள முதல் அத்யாயத்தை மட்டும் தான் படித்து புரிந்து வைத்திருந்தார். இவ்வளவு நடந்ததையும் கூரத்தாழ்வான் பார்த்துக் கொண்டு இருந்தார். இராமாநுசர் வருத்தத்துடன் அழுது கொண்டிருந்தார். ஆழ்வானும் இவ்வருத்தத்தினால் அழுகிறார். இந்த வருத்தத்துடன் இராமாநுசரிடம் மெதுவாக கூரத்தாழ்வான் "ஸ்வாமி விரும்பினால் அடியேன் ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்கிறேன்" என்றார். இராமாநுசர் "சொல்லவும்" என்றார். ஆழ்வான், "ஸ்வாமி கவலைப்பட வேண்டாம் அப்புத்தகம் போனால் போகட்டும்" என்றார். ஸ்வாமிக்கு புரியவில்லை. "இவ்வளவு சிரமப்பட்டு அங்கிருந்து எடுத்து வந்து அதைப் பறி கொடுத்து விட்டோம். இது போனால் போகட்டும் என்று சொல்லாமா?" என்று ஆழ்வானைப் பார்த்து வினவினார். அதற்கு கூரத்தாழ்வான் அற்புதமாக, "அடியேன் (நான்) அப்புத்தகத்தில் உள்ள அனைத்து பாகங்களையும் படித்து விட்டேன். ஸ்வாமி விரும்பினால் இங்கேயே சொல்லுகிறேன், அல்லது, திருவரங்கம் சேர்ந்த பின்பு விண்ணப்பம் செய்கிறேன்", என்று கூறினார். இதைக் கேட்டவுடன் இராமாநுசர் ஆனந்தப்பட்டார். "எவ்வளவு மேதா விலாஸம் கூரத்தாழ்வானுக்கு, அந்த போதாயன வ்ருத்திகரந்தம் என்பது சிறியது அல்ல. நினைத்துக் கூட பார்க்க முடியாத அவ்வளவு பெரிய புத்தகம். பெரிய மேதாவி கூட இதைப் படித்து உணர முடியாது. நமக்குப் பணிவிடையெல்லாம் விரைவாகச் செய்துவிட்டு, பயணக்களைப்பையும் பாராது இந்த கிரந்தத்தை படித்திருக்கிறாரே! எவ்வளவு புத்தி கூர்மை ஆழ்வானுக்கு!" என்று இராமாநுசர் பெருமை பட்டுக் கொண்டார்.

இவ்வளவு மேதா விலாசத்தை பெற்றவராக இருந்தும் கூரத்தாழ்வான் அதை வெளியில் காட்டிக் கொண்டது கிடையாது. அவ்வளவு அடக்கம் ஆழ்வானுக்கு. நம் ஆசார்யன் இராமாநுசரால் எழுத முடியாததை நம்மால் எழுத முடியும் என்ற இறுமாப்பு இல்லாதவர் கூரத்தாழ்வான். இத்தனையும் நான் ஞாபகம் வைத்துக் கொண்டு இருப்பதே இராமாநுசரின் திருவடி ஸம்பந்தத்தால் தான் என்று நினைத்தவர் கூரத்தாழ்வான். ஆக, நம் ஸம்ப்ரதாயத்திற்கு விசிஷ்டாத்வைத மதத்தின் படி இராமாநுசரின் விளக்கவுரை (ஸ்ரீ பாஷ்யம்) கிடைப்பதற்கு முழு முதல் காரணம் ஸ்ரீ கூரத்தாழ்வானே ஆவார். இதனால் ஆழ்வானுடைய சோம்பலின்மையும், அடக்கமும், அபாரமான அறிவும் வெளிப்படுகிறது.

**உடையவர் ஸ்ரீபாஷ்யம் உரையருள ஆழ்வான் உறுதுணையாக இருத்தல்**

இராமாயணத்தில், இராமபிரான் காட்டில் வசித்த 14 வருட காலத்திலும் மற்ற காலத்திலும் இளைய பெருமாள் (லக்ஷ்மணர்) இராமபிரானுக்கு பக்குவமாக அனைத்து கைங்கர்யங்களையும் செய்து வந்தார். அதைப் பார்த்த இராமர் மனம் மகிழ்ந்து "லக்ஷ்மணா,

குறிப்பறிந்து கார்யம் செய்ய வல்ல புத்திசாலியான நீ இருக்கும் போது தந்தையான தசரத சக்கரவர்த்தி மரணமடைந்ததாகவே நான் நினைக்கவில்லை'' என்று லக்ஷ்மணனைக் கொண்டாடினார். அதேபோல் இராமாநுசர் ஆழ்வானை நோக்கி, "போதாயன வ்ருத்தி க்ரந்தத்தை உம்முடைய நெஞ்சில் தேக்கி வைத்துள்ள நீர் இருக்கும்போது அந்த வ்ருத்தி க்ரந்தத்தை இழந்ததாக நினைக்கவில்லை'' என்று கொண்டாடினார். இந்தப் புத்தகத்தில் உள்ள அனைத்தையும் தெரிந்து வைத்துள்ள ஆழ்வான் நம்முடன் இருக்கும் வரை, அந்தப் புத்தகம் நம் கையில் இருப்பதாகவே நினைக்கிறேன் என்று இராமாநுசரும் மகிழ்ந்தார். மேற்கொண்டு பயணத்தைத் தொடர்ந்து திருவரங்கம் வந்து சேர்ந்தார் "ஸ்ரீபாஷ்யம்" (ப்ரஹ்மஸூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைத மதத்தின் படி விளக்கவுரை) எழுதத் தொடங்கினார். இராமாநுசர் எழுத ஆரம்பித்தவுடன் ஆழ்வானை நோக்கி "ஆழ்வானே! இந்த விளக்கவுரையை நான் வாயால் சொல்லிக் கொண்டே வருகிறேன். நீர் தான் ஓலையில் அதை எழுதிக் கொண்டு வர வேண்டும். மேலும் நான் வ்ருத்தி க்ரந்த புத்தகத்தை முழுவதும் படிக்கவில்லை. எனவே சில இடங்களில் என்னுடைய விளக்கவுரை அந்த புத்தகத்திலிருந்து முரண்பட வாய்ப்புள்ளது. அவ்வாறு முரண்படும் பொழுது நீர் என்னிடத்தில் வ்ருத்தி க்ரந்தம் இந்த இடத்தில் இப்படியுள்ளது என்று எனக்கு உணர்த்த வேண்டும் என்று கூறினார். இதைக் கேட்ட ஆழ்வான், "விளக்கவுரையை எழுதுவது எனக்கு கிடைத்த பாக்கியம். ஆனால் ஆசார்யனான ஸ்வாமி கூறுவதில் தவறு இருக்க வாய்ப்பில்லை. அனைத்தும் அறிந்த ஸ்வாமி இவ்வாறு கூறுவது ஏற்றுக் கொள்ள முடியாதது'' என்றார். பிறகு இராமாநுசருக்கும் ஆழ்வானுக்கும் ஒரு உடன்பாடு ஏற்பட்டது. இராமாநுசரும் ஆழ்வானைப் பார்த்து, "நான் விளக்கவுரையை சொல்லிக் கொண்டே வருகிறேன்; நீர் எழுதிக் கொண்டே வாரும்; போதாயன வ்ருத்திக்கு ஒத்திருக்கவில்லை என்றால், எழுதாமல் நிறுத்திக் கொள்ளவும். அதை நான் புரிந்துக் கொள்கிறேன்," என்று கூறினார். இதில் கூறியபடி, ஒரு இடத்தில் ஆழ்வான் எழுதுவதை நிறுத்தினார். அவ்வாறு நிறுத்தும் பொழுது இராமாநுசரும் அதைப் புரிந்து கொண்டு இன்றைக்கு எழுதியது போதும்; பிறகு தொடருவோம் என்று கூறினார். பிறகு இராமாநுசர், சொல்ல வந்த வாக்கியத்தை அலசி ஆராய்ந்து விட்டு சரியான வாக்கியங்களைக் கொண்டு விளக்கவுரையை தொடர, ஆழ்வான் எழுதி நிறைவு செய்தார். இவ்வாறே இராமாநுசரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து "ஸ்ரீபாஷ்யம்" எழுதி முடித்தார்கள். தனக்கு உறுதுணையாக இருந்த ஆழ்வானை நினைத்து, இளையபெருமாளை எம்பெருமான் இராமன் கொண்டாடினாப்போலே, "ஆழ்வான் நீர் இருக்கும் பொழுது ஆளவந்தார் மறைந்ததாக நான் நினைக்கவில்லை'' என்று இராமாநுசர் மகிழ்ந்து கொண்டாடினார். ஆளவந்தாரிடம் இருந்த அனைத்து ஞானமும் ஆழ்வானிடம் உள்ளது என்று கொண்டாடினார்.

## திருக்கோட்டியூர் நம்பியிடம் சந்தேகம் தெளிந்து வருதல்

எம்பெருமானார் தம்முடைய கோஷ்டியில் சிஷ்யர்களுக்கு உபய வேதாந்த க்ரந்த காலக்ஷேபம் (வேதங்களுக்கும், நாலாயிர திவ்வியபிரபந்தத்திற்கும் ஆசார்யர்கள் எழுதி வைத்துள்ள உரைகளுக்கும் விளக்கம் எடுத்துரைப்பது) செய்து வந்தார். ஒரு முறை, ஒரு

சந்தேகம் ஏற்பட்டது. ஜீவாத்மாவிற்கு ஞானம் என்பது முக்கியமா! அல்லது இந்த ஆத்மா பரமாத்மாவிற்கு (ஸ்ரீமந் நாராயணனுக்கு) அடிமை என்பதை உணர்தல் முக்கியமா? என்பதுதான் சந்தேகம். இந்த சந்தேகத்திற்கு இராமானுசருக்கு அர்த்தம் தெரியும் எனினும், அந்த சந்தேகத்தை ஞானத்தில் சிறந்தவரான திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று அவர் மூலம் அறிய ஆசைப்பட்டார். ஆகவே ஆழ்வானை நம்பியிடம் அனுப்பி வைத்தார். நம்பியை ஸேவித்து இந்த சந்தேகத்தைத் தெரிவிந்து, அதை தெளிவிக்கக் கோறினார். ஆறு மாதம் நம்பிக்குப் பணிவிடை செய்து வந்தார். எனினும் நம்பி அந்த சந்தேகத்தைத் தீர்த்து வைக்கவில்லை. ஆசார்யனைப் பிரிந்து இருக்க முடியாத ஆழ்வான், இராமானுசரை ஸேவித்துவிட்டு வருகிறேன் என்று நம்பியிடம் கூறினார். ஆழ்வான் புறப்படும் பொழுது நம்பி இவரை அழைத்தார். ஆழ்வானிடம், "நம்மாழ்வார் 'அடியேனுள்ளான்' என்று திருவாய்மொழியில் பாடி உள்ளார். அதனுடைய அர்த்தத்தில் இருந்து உம்முடைய சந்தேகத்தை தீர்த்துக் கொள்ளவும்" என்று கூறினார். ஆழ்வானும் நம்பிக்கு நன்றி தெரிவித்துவிட்டு, திரும்பி வந்து, இதை அப்படியே இராமானுசரிடம் விண்ணப்பித்தார்.

**அடியேனுள்ளான் என்பதின் கருத்து**: அடியேனுள்ளான் என்ற பாசுரம் நம்மாழ்வாரின் திருவாய்மொழி எட்டாம்பத்தில் 'கண்கள் சிவந்து' என்று தொடங்குகின்ற திருவாய்மொழியில் இரண்டாவது பாசுரமாகும். (முதல் இரண்டு பாட்டுக்களும், எம்பெருமானின் (ஸ்ரீமந் நாராயணனின்) ஸௌந்தர்யத்தை (அழகை) சொல்ல வந்தவை). இதில், "எம்பெருமான் அனைத்து ஜீவாத்மாக்களிலும் புகுந்துள்ளான்" என்று அர்த்தம் சொல்லக் கருதினார். நம்மாழ்வார் இதையே 'ஆத்மாவினுள்ளான்' என்று சொல்லி இருக்கலாம். ஆனால் அவரோ 'அடியேனுள்ளான்' என பாடியுள்ளார். அதாவது, இந்த ஆத்மாவானது பரமாத்மாவின் (திருமாலின்) அடிமை என்பதை உணர்த்துகிறது. அடியேன் (நான் உன் அடிமை) என்ற வார்த்தை பரமாத்மாவின் அடிமையான என்னுடைய ஆத்மாவில் எம்பெருமான் புகுந்துள்ளான், என்பதை உணர்த்துகிறது. எனவே, அனைத்து ஆத்மாக்களுக்கும் பரமாத்மாவின் அடிமை என்று புரிந்து கொள்கிற ஞானமே முக்கியமானது, சிறந்தது என்று நாம் கொள்ள வேண்டும். ஆத்மாவிற்கு ஞானத்தைக்காட்டிலும் ஆனந்தத்தைக் காட்டிலும் சேஷத்வ ஞானமே (அடிமை என்கிற ஞானமே) முக்கியமானது.

### ஆழ்வான் நம்பெருமாள் ஸந்நிதி புராணம் வாசிக்கும் கைங்கர்யம் பெறுதல்

ஒரு நாள் நடுப்பகலில் உச்சி வெயிலிலே எம்பெருமானார் தன்னந்தனியாக திருவரங்கத்தமுதனார் வீட்டிற்கு சென்றார். அமுதனார் "ஸ்வாமி! இந்த உச்சி வெயிலிலே எதற்காக இங்கு வந்துள்ளீர்" என்று வினவினார். இராமானுசர், "நீர் எம்பெருமான் ஸந்நிதியில் தினமும் செய்து வரும் புராணம் வாசிக்கும் கைங்கர்யத்தை எனக்குத் தர வேண்டும்," என்று கேட்டுக் கொண்டார். அமுதனாரும், "அடியேனுடைய ஆசார்யனின் (கூரத்தாழ்வானின்) ஆசார்யனான நீர் (இராமானுசர்) கேட்டு நாம் தராமல் இருப்போமா! (ஆழ்வானை மனதில் தேக்கிக் கொண்டு). அப்படியே தந்தோம்" என்று இராமானுசரின் திருவடியில் ஸமர்ப்பித்தார். இந்த கைங்கர்யத்தை இராமானுசர் ஆழ்வானை செய்யும்படி

கட்டளையிட்டார். அன்று தொடங்கி இன்றளவும் ஆழ்வான், மற்றும் ஆழ்வானின் திருக்குமாரான பட்டர் பரம்பரையினரால் நம்பெருமாள் ஸந்நிதியில் தினமும் புராணம் வாசிக்கும் கைங்கர்யம் நடைபெற்று வருகிறது. இதையேதான் பட்டரின் தனியனில் "ஸ்ரீ ரங்கேச புரோஹித:" என்று நாம் ஸேவிக்கிறோம். இது எம்பெருமானாருக்கு ஆழ்வானிடத்திலே உள்ள உள்கனிந்த அன்பைக் காட்டுகிறது.

## ஊமை பெற்ற பாக்கியத்தைக் கண்டு ஆழ்வான் வருந்தினது

ஒரு நாள் இராமாநுசர் ஓர் ஊமையை மடத்திற்கு அழைத்து வந்து, கதவுகளை சாத்தி, ஊமையிடம் செய்கையாலே தன்னுடைய திருவடிகளைக் காட்டிக் கொடுத்தார். அவரும், "இத்திருவடிகளே நமக்குத் தஞ்சம்" என்று உணர்ந்து, இராமாநுசரின் திருவடிகளைத் தன்னுடைய தலையின் மேல் வைத்துக் கொண்டார். இதையே, கதவு துவாரத்தின் வழியாக ஆழ்வான் பார்த்து, "ஐயோ! ஆழ்வானாகப் பிறந்து, சாஸ்த்ரங்களைக் கற்று அழிந்துவிட்டேனே! ஒரு ஊமையாகப் பிறந்திருந்தால் இராமாநுசரின் திருவடிகளை தலைமேல் வைத்துக் கொள்ளும் பாக்கியம் கிடைத்திருக்குமே. ஆழ்வானாக பிறந்து பயனில்லையே", என்று அழுது புலம்பினார். ஆசார்யனின் திருவடியைத் தவிர மற்றொன்று உண்டு என்பதையே அறியாதவர் ஸ்வாமி ஸ்ரீ கூரத்தாழ்வான். இதிலிருந்து, ஆழ்வானின் அகங்காரமின்மையும், எம்பெருமானாரின் திருவடியின் பெருமையும் வெளிப்படுகிறது.

## ஆழ்வானுடைய ஜீவகாருண்யம்

எந்த உயிரினங்களிடமும், மனது, வாக்கு, உடல் என்கிற முக்கரணங்களாலும் அபசாரப்படுவது (தீங்கை நினைத்தல், சொல்லுதல் மற்றும் செய்தல்) கூடாது. இதன் படியே, ஜீவகாருண்யத்துடன் (எல்லா உயிர்களிடமும் அன்புடன்) வாழ்ந்து காட்டியவர் ஸ்ரீ கூரத்தாழ்வான். ஒரு நாள், ஒரு தவளை, ஒரு பாம்பின் வாயில் அகப்பட்டு, வலி தாங்கமுடியாமல் கதறி கூக்குரல் இடுகிறது. ஆதைக் கேட்ட கூரத்தாழ்வான் "ஐயகோ! இது யாரைக் காப்பாளா் என்று நினைத்துக் கூப்பிடுகிறதோ!" என்று மயங்கி விழுந்தாராம். மற்றொருநாள் ஆழ்வான் தோட்டத்தின் வழியாக சென்று கொண்டிருந்தார். அப்போது, ஒருவன் ஒரு வாழைக்குருத்தை அறுத்துக் கொண்டிருந்தான். அறுத்த இடத்திலிருந்து பால் வடிந்ததைக் கண்டு ஆழ்வான் மயங்கி விழுந்தார். பின்னும் ஒருநாள், திருக்காவேரியில் தண்ணீர்க் குடத்தை இடுப்பிலே எடுத்து வைத்து உதவி செய்ய ஆளில்லாமல் ஒரு கா்பிணி பெண் வருந்தி நின்று கொண்டிருந்தாள். அப்பெண்ணுக்குத் தண்ணீர் குடம் எடுத்து வைத்து உதவினார். இது போன்ற மற்றும் பல சரித்திரமும் புகழ் பெற்றவை. இவர் இராமனின் அம்சமாக அவதரித்ததாலும், எம்பெருமானாரின் சிஷ்யராக இருந்ததாலும் வந்த ஜீவகாருண்யம் போலும்.

## ஆழ்வானின் ஆத்ம குண பரிபூர்த்தி

அக்காலத்தில் அரசாண்டு வந்த வீரசைவமத ஈடுபாடு கொண்ட சோழராஜன், வைணவகளிடம் பகையுணர்ச்சியுடன் இருந்து வந்தான். அவன் ஆங்காங்கு

உள்ள விஷ்ணு சிலைகளை எடுத்தெறிந்து விடவேண்டும் என்று முயன்றான். அவனுடைய ஆலோசகர்கள் அவனிடத்தில், "மந்திரங்கள் ஓதி, பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு சிலைகளை அழியச் செய்தால் உனக்குப் பெருத்த தீங்கு நேரிடும்" என்று கூறினார். அதைக்கேட்ட சோழன், 'அந்த சிலைகளில் உள்ள தெய்வ சக்தியை மந்திரங்கள் மூலமாக வெளியில் எடுத்து விடுங்கள். பிறகு அச்சிலைகளை அழியச் செய்வோம்' என்று கூறினான். ஒரு அந்தணனுக்கு பணங்கள் கொடுத்து, "முதலில் நீ ஒருவர் கண்ணிலும் தென்படாதபடி உன்னை மறைத்துக் கொள். ஒவ்வொரு விஷ்ணு கோயிலாகச் சென்று அங்குள்ள சிலைகளிலிருந்து தெய்வ சக்தியை எடுத்து விடு. பிறகு அச்சிலைகளை எடுத்து கடலில் எறிந்துவிடு" என்று ஆணையிட்டான். அதன்படி சில விஷ்ணு சிலைகளை எடுத்தெறிந்து வந்தனர். இச்செய்தி இராமாநுசருக்கு எட்டியது. அவர் "நாம் நெடுநாளாக இத்திருவரங்கம் பெரிய கோயிலை காப்பாற்றிக் கொண்டு வருகிறோம். இதற்கு அழிவு வரும் போலிருக்கிறதே! இனி நாம் என்ன செய்வது என்று தன் குருவான பெரியநம்பிகளுடன் சிந்தித்திருந்தார். அதற்கு பெரியநம்பிகள், " நான் பெருமானுடைய எல்லையிலே ஒரு பிரதக்ஷிணம் (சுற்று) வருகிறேன். என் பின்னே உம்முடைய சிஷ்யர்களின் ஒருவரை அனுப்ப வேண்டும். அவ்வாறு வரும் சிஷ்யர் 'ஒருவன் பின்னே நாம் போகிறோம்' என்று தாழ்வு மனப்பான்மை கொண்டவனாக இருக்கக்கூடாது", என்று கூறினார். இப்படிப்பட்ட ஆத்மகுணத்தை (உயர்ந்த பண்புகள்) பரிபூர்ணமாக (முழுவதுமாக) உடையவர் கூரத்தாழ்வான் ஒருவரே என்று இராமாநுசருக்குத் தெரியும். இருப்பினும் தன்னுடைய ஆசார்யன் பெரியநம்பி மூலமாக இதைக் கேட்க எண்ணினார். இராமாநுசர் பெரியநம்பியைப் பார்த்து,"இப்படிப்பட்ட சிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே!" என்று சொன்னார். அதற்கு பெரியநம்பிகள், "நம் கூரத்தாழ்வானை அனுப்பலாகாதோ" என்று கூறினார். அருகிலிருந்த ஆழ்வான் இதைக்கேட்டு 'நம்பிகள் நம்முடைய குணத்தை அறிந்து கொண்டு பல சிஷ்யர்களின் முன்னே இப்படிப் பெருமையாகப் பேசும் படியான பாக்கியம் பெற்றோமே! என்று பெரு மகிழ்ச்சி அடைந்தார். அவ்வாறே நம்பிகள் பின்னே வலமாகச் சென்று திருவரங்கத்திற்கு வரும் தீங்கினைத் தடுத்தார்கள். இப்படிப்பட்ட ஆத்மகுணம் நிரம்பப் பெற்றவர் ஸ்ரீகூரத்தாழ்வான் ஒருவரே.

## ஆழ்வானுக்கு திருக்குமாரர்கள் அவதரித்தல்

ஆழ்வான் தமது செல்வத்தை முற்றும் துறந்து திருவரங்கத்தில் எம்பெருமானார் திருவடிகளில் வாழ்ந்து வந்தார். தினமும் சில திருமாளிகைகளில் உஞ்சவ்ருத்தி (அரிசி பிச்சை எடுத்து வாழ்க்கை நடத்துதல்) செய்து அதைக் கொண்டு குடும்பம் நடத்தி வந்தார். தினமும் கிடைக்கிற உணவுப் பொருளை அடுத்த நாட்களுக்கு வைத்துக் கொள்ள மாட்டார். ஒருநாள் நடுப்பகல் வரையில் விடாமல் பெருமழை பெய்தது. உஞ்சவ்ருத்தி எடுக்க முடியவில்லை. தீர்த்தத்தை (தண்ணீர்) மட்டும் அருந்தி, "உண்ணுஞ்சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்கிற திவ்ய பிரபந்தத்தை சொல்லிக்கொண்டு பட்டினியாக இருந்தார். இரவு 9 மணியளவில் நம்பெருமாள் அரவணை பிரஸாதம் (இரவில் பெருமான் அமுதுசெய்யும் சர்க்கரைப்

பொங்கல் போன்ற ப்ரஸாதம்) அமுது செய்யும் மணி ஒசை கேட்டது.உடனே ஆண்டாள் நம்பெருமாளைக் குறித்து "உம்முடைய அடியவரான கூரத்தாழ்வான் பட்டினியாகயிருக்க, நீர் மட்டும் மகிழ்ச்சியுடன் அமுது செய்கிறீரோ! என்று நினைத்தார். நினைத்தளவில், நம்பெருமாள் அர்ச்சகர் மூலமாக உத்தம நம்பியை அழைத்து, இந்த அரவணை ப்ரஸாதத்தை ஆழ்வான் திருமாளிகைக்கு எடுத்துச் சென்று அவரிடத்தில் கொடுங்கள்" என்று கட்டளை இட்டார். பிரஸாதத்தை எடுத்துக் கொண்டு உத்தமநம்பி ஆழ்வான் திருமாளிகை நோக்கி வருகிறார். அதையறிந்த ஆழ்வான், பதறி எழுந்து அதை எதிர் கொண்டு மஹாப்ரஸாதம் என்று பெற்றுக் கொண்டார். உடனே ஆண்டாளை திரும்பிப் பார்த்தார். பார்த்த மாத்திரம் ஆண்டாள் புரிந்துக் கொண்டாள். அடுத்த நிமிடம் ஆண்டாள் "நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. வாயைத் திறந்து ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை. ஐயகோ! பெருமாளின் அடியவரான நீர் (ஆழ்வான்) இப்படி பட்டினியாக கஷ்டப்படும் (சிரமப்படும்) பொழுது, உமக்கு (பெருமாளுக்கு) அமுதுவேண்டுமா! என்று மனதளவில் நினைத்தேன் அவ்வாறு நினைத்தது தவறு தான். இனி அவ்வாறு மனதளவில் கூட தவறாக நினைக்க மாட்டேன்" என்று கூறினாள். பெருமாளின் பிரஸாதத்தை வேண்டாம் என்று கூற முடியாது. எனவே பிரஸாத்திலிருந்து இரண்டுகவளம் (2 உருண்டை) எடுத்து தாமும் உண்டு, மற்றொன்றை ஆண்டாளுக்கும் கொடுத்தார். அந்த இரண்டு கவளத்திலிருந்து பிறந்தவர்கள் தான் பராசர பட்டரும், வேதவ்யாஸ பட்டரும். ஆளவந்தாரின் இரண்டாவது ஆசையை பூர்த்தி செய்யவே, ஆழ்வானின் குமாரர்களுக்கு "பராசர பட்டர்", "வேதவ்யாஸ பட்டர்" என்று திருநாமம் சூட்டினார் இராமாநுசர்.

## ஆழ்வான் ராஜ சபைக்கு எழுந்தருளி நம் தர்சனத்தைக் காப்பாற்றுதல்

ஆழ்வான் இராமாநுசருக்கு உறுதுணையாக அவருடைய திருவடிகளில் ஆனந்தமாக இருந்து வைணவப் பேரரசை நிர்வாகம் செய்து வந்தார். அந்த காலத்திலே, ராஜேந்திரசோழபுரத்தில் குலோத்துங்க சோழன் அரசாண்டு வந்தான். சைவ மதத்தைப் பின்பற்றி வந்தான். கள்ளப் பொய் நூல்களை மெய்நூலாக கொண்டு, சைவ மதத்தைப் பரப்பி, வைணவ மதத்தை அழிக்க நினைத்தான். அவரவர்கள் மதத்தை அவர்கள் பின்பற்றி,மற்ற மதங்களை மதித்து வாழ்ந்து வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவ்வாறு இல்லாமல், அவன் நாட்டிலுள்ள வித்வான்களைத் திரட்டி அவர்களிடம் "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனுக்கு மேற்பட்ட தெய்வமில்லை) என்று எழுதி கையெழுத்திட வேண்டும் என்று மிரட்டினான். சிலர் அவனுடைய ஆட்சிக்கு பயந்து கையெழுத்திட்டனர். சிலர் அவன் தரும் பணத்திற்கும், பொருளுக்கும், பூமிக்கும் ஆசைப்பட்டு கையெழுத்திட்டனர். சிலர் இதை ஏற்றுக் கொள்ளமுடியாமல் ஊரைவிட்டு ஓடி விட்டனர். அப்பொழுது கூரத்தாழ்வானின் சிஷ்யனான, "நாலூரான்" என்று ஒருவன் இருந்தான். அவன் ராஜாவை பார்த்து, "ராஜாவே! தாங்கள் எதற்காக தேவையில்லாதவர்களைத் துன்புறுத்திக் கையெழுத்து வாங்குகிறீர்- இதனால் ஒரு பயனும் இல்லை. இவர்கள் கையெழுத்து போட்டால் வைணவம் இல்லை என்று ஆகிவிடாது. இவர்களுக்கு எல்லாம் தலைவராக உள்ள இராமாநுசரிடம் கையெழுத்து

வாங்கிவிட்டால், இந்த ஸ்ரீ வைஷ்ணவ உலகமே கையெழுத்து போட்டதாக ஆகும்'', என்று கூறினான். ராஜா உடனே தன் சேவகர்களை அனுப்பி இராமாநுசரை அழைத்து வரச்சொன்னான். ராஜ சேவகர்கள் இராமாநுசரைத் தேடி வந்தனர். அந்த சமயத்தில் இராமாநுசர் நீராடிக் கொண்டிருந்தார். இச்செய்தியை ஆழ்வானிடம் மற்ற சிஷ்யர்கள் கூறினார்கள். அதைக்கேட்ட ஆழ்வான் ''இராமாநுசர் ராஜசபைக்குச் சென்றால் அவருக்கு தீங்கு நேரக்கூடும்', என்பதை உணர்ந்தார். ஆசார்யனுடைய திருமேனியைக் காப்பாற்றுவது சிஷ்யனுடைய கடமையாகும். ஆகையால், தாமே அவருடைய வேடம் பூண்டு ராஜசபைக்குச் செல்வது நல்லது என்று நினைத்தார். துறவியல்லாத ஆழ்வான் காவியுடை உடுத்துவது ஸாமாந்ய சாஸ்த்ரத்தில் இடமில்லை. எனினும், ''அத்யந்த பக்தி யுக்தானாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:'' என்றபடி, ஆசார்யன் திருமேனியை காப்பாற்றுவதற்காக விசேஷ சாஸ்த்ரத்தை ஏற்க முடிவு செய்தார். இராமாநுசரின் காவியுடையை எடுத்து உடுத்திக் கொண்டார். இராமாநுசரின் த்ரிதண்டத்தையும்(முக்கோல்) எடுத்துக் கொண்டார். தேடி வந்த சேவகர்களோடு, தாமே இராமாநுசராக ராஜ ஸபைக்குச் சென்றார். கூடவே, பெரியநம்பியும், பெரியநம்பியின் பெண்ணான அத்துழாயும், மற்றும் சிலரும் சென்றனர். இராமாநுசர் குளித்துவிட்டு வெளியே வந்து முக்கோலையும், காவியுடையையும் தேடினார். முதலியாண்டான் நடந்ததை கூறினார். அப்படியானால், ஆழ்வானின் வெள்ளையுடையைக் கொடுங்கள் என்று கேட்டு, இராமாநுசர் உடுத்திக் கொண்டார். சிஷ்யர்கள், இராமாநுசரின் திருமேனிக்கு ஒரு ஆபத்தும் வராமல் இருக்க, அவரை திருநாராயணபுரத்திற்குச் (மேல்கோட்டைக்குச்) செல்லுமாறு கேட்டுக் கொண்டனர்; அவரும் மேல்கோட்டைக்குச் சென்றார். இவ்வாறு ஆழ்வான் காவியுடையும், இராமாநுசர் வெள்ளையுடையும் உடுத்திய நிகழ்ச்சி இன்றளவும் ஸ்ரீபெரும்பூதூரிலும் கூரத்திலும் ஆறாம் திருநாளன்று (வெள்ளை சாத்துபடி உத்ஸவம்) நடந்து வருகிறது.

## இவ்வரலாற்றில் வரும் மறுப்புரைக்குத் தெளிவுரை

ஆழ்வான் காவியுடுத்தி முக்கோலேந்தினாரென்றும், இராமாநுசர் வெள்ளை யுடையை சாத்திக் கொண்டாரென்றும் கூறும் இவ்வரலாற்றில் சிலர் ஆக்ஷேபம் (மறுப்பு) கூறுவதுண்டு. நம்முடைய தர்மத்தை நிலைநாட்டப் பிறந்த ஆசார்யர்கள் இப்படி அறநெறிக்கு மாறாக துறவிகளின் அரசரான இராமாநுசர் வெள்ளையுடையும் (ஸந்யாஸிகள் வெள்ளை வேட்டி உடுத்துவது கூடாது), கூரத்தாழ்வான் காவியுடையும் (ஸந்யாஸி அல்லாதவர்கள் காவி வேட்டி உடுத்தக் கூடாது) உடுத்தி இருக்க வாய்ப்பில்லை என்று சிலர் கூறுவதுண்டு. இராமாநுசர் காலத்திற்குப் பின்பு வந்தவர்கள் ஏதோ மாறுபாடாகச் சொல்லி வருகின்றனர் என்று சிலர் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. பிற்காலங்களில் வந்த தமிழ் நூல்களில் மட்டும் இவ்வரலாறு இருக்குமென்றால் அவநம்பிக்கை உண்டாக இடமுண்டு. ஆனால் இராமாநுசர் காலத்திலேயே வாழ்ந்தவரும், மிகவும் நம்பத்தகுந்தவரும், பெரிய பண்டித சிகாமணியுமான 'கருட வாஹனபண்டிதர்' என்பவர் 'திவ்யஸூரிசரிதம்' என்கிற சிறந்த வடமொழிக் காவியத்தில்,

இவ்வரலாறு ஐயந்திரிபறச் சொல்லப்பட்டுள்ளதால், இதை மறுப்பதென்பது பகுத்தறிவாளர்களின் பணியன்று. அந்நூலில் முடிவில்

சோளஸ்ய ச்ருதிகடு சேஷ்டிதம் யதீந்த்ர:
ச்ருத்வாத ச்ரிதவிமலாம்பரஸ் ஸ ரங்காத |
ஸ்ரீரங்கிந் அவ தவ தாம தர்சநஞ்ச
இத்யுக்த்வா ப்ராஸ்தித விநிவேச்ய கூரநாதம் || *(18ம் ஸர்கம் 74ம் ச்லோகம்)*

(இதன் பொருள் :- சோழனுடைய கடுமையான செய்கையை எம்பெருமானார் கேள்விப்பட்டார். வெள்ளைத் திருப்பரிவட்டம் உடுத்திக் கொண்டு, "அழகிய மணவாளா! உன் கோயிலையும், தர்சனத்தையும் காத்தருள்" என்று பிரார்த்தித்து விட்டு ஆழ்வானை நிறுத்திவிட்டுத் தாம் திருவரங்கத்திலிருந்து புறப்பட்டார்) என்றுள்ள ச்லோகமும், அதற்குமேல் எழுபத்தேழாம் ஸ்லோகத்தில் : -

ஆநைஷீத் ந்ருபஸவிதம் மஹார்ஹ பூர்ணம்
ஸ்ரீரங்காத் ஸஹ யதிவேஷ கூரபர்த்ரா

(இதன் பொருள்:- யதிராஜ வேஷம் பூண்ட கூரத்தாழ்வானையும், பெரியநம்பியையும் ராஜஸபையில் கொண்டு சேர்த்தது ராஜ ஸைந்யம்) என்றிருப்பதும் முக்கிய ஆதாரமாக கொள்ளத் தக்கவை.

அது மட்டுமல்லாமல், எம்பெருமானார்க்கு அத்தாணிச் சேவகராய் இருந்த வடுகநம்பி அருளிச் செய்த 'யதிராஜ வைபவம்' என்னும் ஸம்ஸ்க்ருத ச்லோக ரூபமான சரித்திரநூலிலும்,

காஷாயத்ருத் கூரபதிஸ் த்ரிதண்டீ
ப்ராயாந் மஹாபூர்ணயுதஸ்து தத்ர |
வாத்ஸ்யேசமுக்யைஸ் ஸஹிதோ யதீச:
சுக்லாம்பர: ப்ராப திசம் ப்ரதீசீம் ||

என்கிற (95 ஆம்) ச்லோகத்தில், இவ்வரலாறு விளக்கமாக உரைக்கப்பட்டது. இவ்வாறு பல நூல்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளதால், இவ்வரலாறு மிகவும் நம்பத்தகுந்ததென்று பெரியோர் கொள்வர்.

மேலும், இராமாநுசருக்குத் தெரியாமலேயே ஆழ்வான் தாமே முடிவு எடுத்து த்ரிதண்ட காஷாயங்களை உடுத்தி ஸபைக்குச் சென்றார் என்பதே சில நூல்களில் உள்ளது, மற்ற சில நூல்களில், சோழ ராஜாவின் சேவகர்கள் வந்தார்கள் எம்பெருமானார், ஆழ்வான், ஆண்டான், மற்றும் பலரும் கூடிக்கலந்து ஆலோசித்தார்கள். அதன்படி உடையவர் வெள்ளையைச் சாத்திக் (உடுத்திக்) கொண்டு வெளியேற வேண்டும். ஆழ்வான் இராமாநுசர் வேடமிட்டு ராஜஸபைக்குச் செல்ல வேண்டும். அப்பொழுது தான்

இராமானுசரை நாம் காப்பாற்ற முடியும், என்று முடிவு எடுத்தார்கள். அவ்வாறே நடந்தது என்றும் உள்ளது. இவ்விரண்டில் எதுவாக இருந்தாலும் தகுந்ததே. ஆக, இராமானுசர் வெள்ளை அணிந்து மேல்கோட்டைக்கும், கூரத்தாழ்வான் உடையவர் வேடமிட்டு ராஜ ஸபைக்கும் சென்றார் என்பது வரலாறு.

## ராஜசபையில் நடந்த வரலாறு

பெரியநம்பியும், ஆழ்வானும் (இராமானுசரின் வேடத்தில்) ராஜ ஸபைக்கு வந்து சேர்ந்தனர். ராஜாவும் ஒரு பெரிய ஓலைச்சுவடியை எடுத்து அதில், "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனைக் காட்டிலும் மேம்பட்டவர் இல்லை) என்று எழுதி கையெழுத்திடச் சொன்னான். ராஜாவோ ஆழ்வானை இராமானுசர் என்று நினைத்துள்ளான். ராஜா கூறியதைக் கேட்ட ஆழ்வான் மஹாவிஷ்ணுவான ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள் என்பதை நிலைநாட்ட எத்தனையோ சுருதிகள் (வேதவாக்யங்கள்), ஸ்ம்ருதிகள் (சாஸ்திரங்கள்), இதிஹாஸங்கள், புராணங்கள், முதலியவைகளைக் கொண்டு எடுத்துக் காட்டி விளக்கினார். ஒரு தெய்வம் காலை நீட்ட, மற்றொரு தெய்வம் அந்த திருவடிகளை சுத்தம் செய்ய, அத்திருவடிகளிலிருந்து விழுந்த ஸ்ரீபாத தீர்த்தத்தை மற்றொரு தெய்வம் தலைமேல் தாங்கிக் கொண்டுள்ளதே! இதிலிருந்து ராஜாவாகிய நீ புரிந்து கொள்ளவில்லையே! என்று சொல்லிப் பார்த்தார். ராஜாவோ இதையெல்லாம் கேட்கவில்லை. "நீர் பெரிய வித்வானாகையாலே உமக்கு வாய்க்கு வந்தபடி சொல்லுகிறீர்! அப்படி அன்று, நான் கூறியபடி கையெழுத்து போடுவீராக" என்று கட்டாயப்படுத்தினான். கூரத்தாழ்வான் அந்த ஒலையை வாங்கி, அதில் ராஜா எழுதிய வாக்கியத்திற்குக் கீழே, "த்ரோணமஸ்தி தத:பரம்" என்று எழுதி கையெழுத்திட்டார்.

**வாக்யத்தின் விளக்கம்:**

சோழன் சொன்ன "சிவாத் பரதரம் நாஸ்தி" என்பதற்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை என்று பொருள். மற்றொரு பொருள், 'சிவம்' என்பது 'குறுணி' என்று பொருள். நாம் நெல், அரிசி முதலியவகைகளை அளக்கும் அளவு கோலில், அரைப்படி, கால்படி, ஒருபடி, ஆழாக்கு என்ற பல அளவு சாதனம் உள்ளது. அவ்வாறே, 'குறுணி' என்று ஓர் அளவு உண்டு. இந்த குறுணியைத் தான் 'சிவம்' என்றும் சொல்லுவார்கள். எனவே 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்பதற்கு ஆழ்வான் குறுணியைக் காட்டிலும் மேலானது கிடையாது என்று பொருள் கொண்டார். இந்த அர்த்தத்திற்கு மறுப்பு கூறுவதாக "என்னது இது! குறுணி என்பது ஒரு சிறிய அளவு. அதைவிட பெரியது கிடையாதா என்ன? அதைவிட 'துரோணம்' என்கிற 'மரக்கால்' என்ற பெரிய அளவு உள்ளது. அதையே, 'த்ரோணமஸ்தி தத:பரம்' என்று எழுதினார்.

## பெரியநம்பிக்கும் ஆழ்வானுக்கும் நேர்ந்த ஆபத்து

ஆழ்வான் இவ்வாறு எழுதியதைப் பார்த்த ராஜாவிற்கு பெரும் கோபம் ஏற்பட்டது. பெரியநம்பியை அழைத்து "நீர் எழுத்திடும்" என்றான். பெரியநம்பியும்

“ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள்” என்று எழுதினார். இதைப் பார்த்த ராஜாவிற்கு கோபம் அதிகமாகியது. இருவருடைய கண்களையும் பிடுங்கி எறியுங்கள் என்று சேவகர்களுக்குக் கட்டளையிட்டான். இதைக் கேட்ட ஆழ்வான், “எப்போது என் கண்கள் விஷ்ணு துரோகியான உன்னைப் பார்த்ததோ, அந்த கண்கள் இருப்பதே தவறு” என்று கூறி, தன் கைகளாலேயே தன் கண்களைப் பிடுங்கி எறிந்தார். ராஜ சேவகர்கள் பெரியநம்பியின் கண்களைப் பிடுங்கினர். அன்றே நம் இராமாநுச தர்சநத்திற்காக, (வைணவ ஸித்தாந்தம் (தர்சனம்) தழைக்க வேண்டும் என்பதற்காக), தம்முடைய தர்சனத்தை (கண்களை) இழந்தவர் கூரத்தாழ்வான்.

இவ்வாறு ஆழ்வானும் பெரியநம்பியும் கண்களை இழந்து ராஜஸபையை விட்டு வெளியேறி ஸ்ரீரங்கம் நோக்கி நடந்தனர். வயதானவரான பெரியநம்பியால் கண்கள் பறிக்கப்பட்டதால், உடல் வேதனையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. வழியிலேயே பெரியநம்பியின் உயிர் பிரிய உள்ளது. அந்த நேரத்தில் கூரத்தாழ்வானும், பெரியநம்பி குமாரத்தி அத்துழாயும், பெரியநம்பியிடம் “இன்னும் கொஞ்சம் வேகமாகச் சென்றால் உயிர் பிரிவதற்கு முன்னால் ஸ்ரீரங்கம் அடைந்துவிடலாம். ஸ்ரீரங்கத்தில் உயிர் பிரிந்தால் நல்லதாயிற்றே” என்று கூறினர். அதற்கு பெரியநம்பிகள் “ஸ்ரீரங்கத்தை அடைந்து உயிர் பிரிந்தால் என்னவாகும் தெரியுமா? ஓ! ஸ்ரீரங்கத்தில் உயிர் பிரிந்தால்தான் அது மோக்ஷத்திற்கு வழி என்று பின்னோர் தவறாக நினைத்துக் கொள்வர். அது தவறு. எந்த இடத்தில் உயிர் பிரிந்தாலும் பரவாயில்லை. ஸ்ரீமந்நாராயணனின் திருவடிதான் மோக்ஷத்தைத் பெற்று தரும்” என்று கூறினார். மேலும் தன் திருவடியை ‘அத்துழாய்’ மடியிலும், தலையை கூரத்தாழ்வானின் மடியிலும் வைத்துக் கொண்டு, ஸ்ரீரங்கம் செல்லாமல், வழிலேயே ஸ்ரீபராந்தகபுரம் என்ற இடத்தில் உயிர் துறந்தார் (பாகவதன் திவ்யதேசத்திற்கு சென்று தான் உயிரை விடவேண்டும் என்ற அவசியம் கிடையாது). அங்கேயே, அவ்வூர் ஸ்ரீவைஷ்ணவர்கள் உதவியுடன், பெரியநம்பியின் கைங்கர்யங்கள்(இறுதிச் சடங்குகள்) முடிந்தன. ஆழ்வானைத் தங்களுடைய ஊரிலேயே சில காலம் வைத்துக் கொண்டு, திருக்கண் வேதனை தீரும் வரையில் உபசரித்தார்கள். பிறகு, ஆழ்வானை திருவரங்கம் பெரிய கோவிலில் கொண்டு சேர்த்தனர்.

## திருமாலிருஞ்சோலை யாத்திரை புறப்படுதல்

திருவரங்கத்தை அடைந்த ஆழ்வான், நம்பெருமாளை ஸேவிப்பதற்காக கோவிலுக்கு சென்றார். பெரிய ஸ்ரீபலிபீடத்திற்கு அருகே விழுந்து வணங்கி பெரியநம்பியை பெருமான் திருவடியில் சேர்த்துக் கொண்டது போல் தன்னையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று உள்ளம் நொந்து விண்ணப்பம் செய்தார். பின், கோவிலின் உள்ளே செல்ல நினைத்தார். ஆனால் வாயில் காப்போன் அவரை உள்ளே விடவில்லை. “எதற்காக உள்ளே விட மறுக்கிறாய்” என்று ஆழ்வான் வினவினார். இதற்கு காவலாளி (கிருமிகண்ட சோழனின் சேவகர்) “ராமாநுஜ ஸம்பந்தம் உள்ள எவரையும் உள்ளே விடக்கூடாது என்பது சோழனின் கட்டளை” என்று கூறினார். அங்கு இருந்தவர்களில் சிலர், “இவர் இராமாநுச ஸம்பந்தியாக இருந்தாலும் ஆத்ம குணங்கள்

நிரம்பியவர்;இவர் மற்றவர்களைப் போல் இல்லை; மிகவும் நல்லவர்; சாத்விக குணம் படைத்தவர்; எனவே அவரை உள்ளே அனுமதியுங்கள்'' எனக் கூறினர். இதைக் கேட்ட ஆழ்வானுக்கு அபார வருத்தம். ''எல்லாருக்கும் ஆத்ம குணங்கள் ஆசார்யனை அடைவதற்குக் காரணமாக உள்ளன! இதே ஆத்ம குணங்கள், இராமானுசர் ஸம்பந்தத்தை இழப்பதற்காக எனக்கு இருக்கிறது என்றால், இந்த ஆத்ம குணங்களுளே வேண்டாம்; இராமானுசரின் ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டு, நம்பெருமாள் ஸேவை எனக்குத் தேவை இல்லை'' என்று நம்பெருமாள் ஸேவையையே துறந்தார். நம்பெருமாள் ஸேவை இல்லாமல் திருவரங்கத்தில் இருக்க முடியாமல், திருமாலிருஞ்சோலையில் வசிக்க விரும்பி, அங்கு சென்று சேர்ந்தார். இதனால், ஆசார்யனின் ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டு (விலக்கிக் கொண்டு), எம்பெருமான் ஸேவையாகவே இருந்தாலும் அவசியமில்லை என்பதை உணர்த்தினார்.

## ஸ்தவங்கள் அருளிச்செய்தல்

திருமாலிருஞ்சோலைக்குச் செல்லும் பொழுது தம்முடைய மனத்துயரங்களை மறக்க, எம்பெருமானுடைய குணங்களை நினைத்து நெஞ்சுருகி, ''**ஸ்ரீவைகுண்டஸ்தவம்**'', ''**அதிமாநுஷஸ்தவம்**'' என்ற அற்புதமான இரண்டு ஸ்தோத்திரங்களை அருளிச்செய்து கொண்டே வந்து சேர்ந்தார். இவற்றுள் ''ஸ்ரீவைகுண்டஸ்தவம்'' நூறு ஸ்லோகங்கள். ஆழ்வான் அருளிசெய்த பஞ்சஸ்தவங்களில் இதுவே முதல் ஸ்தவமாகும் (துதி நூலாகும்). இதில், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவனின் (வைகுண்ட நாதனின்) குணங்களையும், ஸ்ரீவைகுண்டத்தின் பெருமையையும், ஆழ்ந்து அநுபவித்துப் பாடியுள்ளார். இரண்டாவதாக, ''அதிமாநுஷஸ்தவம்'' அருளிச்செய்தார். இதில் பகவான் இப்பூவுலகில் எடுத்த நரஸிம்ஹ முதலிய அவதாரங்களைச் சுருக்கமாகவும், 'இராமன்', 'கிருஷ்ணன்'' முதலிய அவதாரங்களை விரிவாகவும் பாடியுள்ளார். ஸ்ரீமந்நாராயணன், நம் போன்ற ஜீவாத்மாக்களைத் திருத்தி, தன்னுடைய திருவடிகளிலே சேர்த்துக் கொள்வதற்காக இவ்வாறு பல அவதாரங்கள் செய்தான். மனிதர்களால் செய்ய முடியாத செயல்களை இவைகளில் செய்து காட்டினான். அப்பெருமைகளை, ஆழ்வான், விளக்கமாக இந்த ஸ்தவத்தில் கூறியுள்ளார். இவ்வதிமாநுஷஸ்தவத்திற்கு ஈடாக சொல்வளமும், பொருள்வளமும் அமைந்த ஒரு ஸ்தோத்திரம் (க்ரந்தம்) இல்லை என்று பேரறிஞர்களும், பகுத்தறிவாளர்களும் ஒருமித்துச் சொல்லுவார்கள்.

## அழகர் ஸந்நிதியில் தம் குறையை விண்ணப்பம் செய்தல்

இவ்வளவு பெருமைகள் வாய்ந்த இரண்டு ஸ்தவங்கள் அருளிச் செய்து கொண்டே, ஆழ்வான் திருமாலிருஞ்சோலை வந்து சேர்ந்தார். விபவாவதாரத்திற்கு பிரதிநிதியாக இருப்பது அர்ச்சாவவதாரம் (அதாவது, பகவான் இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களின் மொத்த உருவம் தான் இன்றைக்கு நம் ஸந்நிதிகளில் சிலாரூபமாக காட்சி தருகிறார்) அல்லவா! அவ்வாறு திருமாலிருஞ்சோலை ஸந்நிதியில் வீற்றிருக்கும்

பெருமாள் அழகரின் வடிவழகைப் பற்றிக் கூறவா வேண்டும்! அழகான தோள்களை உடைய அழகரின் பெருமையையும், அழகையும், நம்மாழ்வார் 3-1 திருவாய்மொழியில் அநுபவித்த கருத்தை, மணவாளமாமுனிகள், "அடிவாரந்தன்னிலழகர் வடிவழகைப்பற்றி, முடியும் அடியும் படிகலனும் முற்றுமனுபவித்தான் முன்" (திருவாய்மொழி நூற்றந்தாதி 21ம் பாசுரம்) என்று பாடியது போலவே, கூரத்தாழ்வானும் அழகரைப் பற்றி, அமுதக்கடல் போல, 132 ஸ்லோகங்கள் கொண்ட **"ஸுந்தரபாஹுஸ்தவம்"** என்ற ஸ்தவம் அருளிச் செய்தார். அதன் முடிவில்,

> விஜ்ஞாபநாம் வநகிரீச்வர! ஸத்யரூபாம்
> அங்கீகுருஷ்வ கருணார்ணவ மாமகீநாம் |
> ஸ்ரீரங்கதாமநி யதாபுரமேஷ ஸோஹம்
> ராமாநுஜார்ய வசக! பரிவர்த்திஷீய ||

என்றும்,

> ஸ்ரீரங்க ச்ரியமந்வஹம் ப்ரகுணயந் த்வத்பக்த போக்யாம் குரு

என்றும்,

> காருண்யாம்ருத வாரிதே வ்ருஷபதே ஹே ஸத்யஸங்கல்பந
> ஸ்ரீமந்ஸுந்தர யோக்யதா விரஹிதாந் உத்ஸார்ய ஸத்வத்ஸல |
> க்ஷாம்யந் ஸாதுஜநை: க்ருதாம்ஸ்து நிகிலாநேவாபசாராங்க்ஷணாத்
> தத்போக்யாம் அநிசம் குருஷ்வ பகவந் ஸ்ரீரங்கதாமச்ரியம் ||

என்றும், அழகரை ஞானக் கண்ணால் ஸேவித்து, "கருணைக் கடலான பகவானே! தீயவர்கள் வேரோடு அழிந்து, திருவரங்க மாநகர் மீண்டும் பழைய நிலையை அடைய, இராமாநுசர் நிழலிலே பழையபடி வாழ என்னை ஸ்ரீரங்கத்தில் வைத்து விடவேண்டும். என் ப்ரார்த்தனையை அங்கீகரிக்க வேண்டும்!" என்று பாடி, சிலகாலம் அங்கேயே வசித்து வந்தார்.

ஆழ்வான் தனக்காக எதையும், எவரிடத்திலும் கேட்க மாட்டார். கண்ணை இழந்து தவிக்கும் பொழுது கூட, எந்த ஸ்தவத்திலும் ஊனக் கண்ணைக் கேட்கவில்லை. இதன் மூலம், "பகவானிடத்தில் நாமாகச் சென்று, இவ்வுலகில் தன் சுயநலத்திற்காக தேவைப்படும் சுகங்களுக்காக எதையும் கேட்கக் கூடாது" என்ற குணத்தைக் காட்டிக் கொடுத்தார்.

### மீண்டும் திருவரங்கம் வந்து சேர்தல்

இப்படி இருக்க, "அந்த சோழராஜன் கழுத்தில் புண்ணாகிப் புழுத்து இறந்து விட்டான்" என்ற செய்தி ஆழ்வானுக்கு எட்டியது. உடனே, அழகர் ஸந்நிதியில் விடைபெற்று மீண்டும் திருவரங்கம் வந்து சேர்ந்தார்.

## எம்பெருமானார் திருவரங்கம் வருதல்

இராமாநுசர் சோழனுடைய தொல்லைகளுக்கஞ்சி திருநாராயணபுரத்தில் வாழ்ந்து வந்தபோது, ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மூலம் சோழராஜா ஸபையில் ஆழ்வானுக்கும், பெரியநம்பிக்கும் நேர்ந்த ஆபத்தைக் கேள்விப் பட்டு மிகவும் மனம் நொந்தார். ஆழ்வானாவது உயிருடன் மீண்டுடாரே என்று மனதைத் தேற்றிக் கொண்டார். தம்மிடத்தில் கைங்கர்யம் செய்து வந்த 'மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டானை' அழைத்து, "மிகவும் விரைவாக ஸ்ரீரங்கம் சென்று, ஆழ்வானை விசாரித்து, அங்குள்ள நிலமையை அறிந்து வாரும்" என்று நியமித்தார். அவரும் அங்கு சென்று, எல்லாவற்றையும் விசாரித்து வந்து இராமாநுஜரிடம் சோழன் இறந்த செய்தியையும் மற்ற நிலைமையையும் விண்ணப்பித்தார். அதுகேட்டு இராமாநுசர் பெருமகிழ்ச்சி அடைந்தார். உடனே புறப்பட்டு, சிஷ்யர்களுடன் தாமுமாக ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். நேரே கூரத்தாழ்வான் திருமாளிகைக்குச் சென்றார். ஆழ்வானும் எதிரே வந்து உடையவர் திருவடிகளிலே வேரற்ற மரம் போல விழுந்து வணங்கினார். உடையவரும் ஆழ்வானை வாரியெடுத்து அணைத்துக் கொண்டார். சோகத்தாலே ஒரு வார்த்தையும் வரவில்லை. உள்ளம் உருக, குரல் தழுதழுத்து, ஆழ்வானைப் பார்த்து, "வாரீர் ஆழ்வான்! இந்த தர்சனத்துக்குக் (வைணவ சமயத்துக்குக்) கண் போன்று விளங்கும் உமக்கு இப்படி கண் இழப்பு ஏற்பட்டதே!" என்று வருந்தினார். ஆழ்வான் இராமாநுசரைப் பார்த்து, "யாராவது ஒரு ஸ்ரீவைஷ்ணவனைப் பார்த்து அவன் அணிந்து கொண்டிருந்த திருமண்காப்பு கோணலாக இருக்கிறது என்று நான் என் மனத்தாலே அபசாரப்பட்டு இருப்பேன். அதனால் தான் என் கண் போனது போலும்" என்றார். அதற்கு இராமானுசர், "ஆழ்வானே, நீர் அதுபோல் ஒரு நாளும் அபசாரப்பட்டிருக்கமாட்டீர். நான் செய்த பாவங்கள் தான் உம்முடைய தலையில் விழுந்துவிட்டது" என்று, ஆழ்வானைத் தேற்றி அழைத்துக் கொண்டு மடத்திற்கு சென்று சேர்ந்தார்.

உண்மையில், தன் கண்களை இழப்பதற்குக் காரணமாயிருந்த சோழராஜாவையோ, நாலூரானையோ கூட ஆழ்வான் குற்றம் சொல்லவில்லை. "நானே தானாயிடுக" என்கிறபடி, நடந்தவைகளுக்குத் **"தானே காரணம்"** என்று சொல்லுவது அவருடைய ஸ்வருபத்தை (உண்மை நிலையை) நன்கு வெளிப்படுத்துகிறது.

## ஆழ்வான் வரதராஜஸ்தவம் அருளிச் செய்தல்

மற்றைநாள், திருமாலிருஞ்சோலையில் ஆழ்வான் அருளிச் செய்த மூன்று ஸ்தவங்களையும் உடையவர் கேட்டருளினார். உடையவர் ஆழ்வானை நோக்கி, "உம்முடைய இவ்வருளிச் செயல்களால் தான் நம்முடைய திருவரங்கச் செல்வம் (ஸ்ரீரங்கம் கோயில்) களையற்று நாமும் இங்கு வாழ்ந்திருக்கப் பெற்றோம். இனி காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும், வேண்டியவைகளை எல்லாம் கொடுக்கும் வள்ளலான வரதராஜ பெருமாளிடம் 'அடியேனுக்கு கண் தந்தருளவேணும்' என்று கேட்டு நீர் ஒரு ஸ்தோத்ரம் (துதி) செய்ய வேண்டும். நம்முடைய தன்மைக்கு

ஏற்றதல்லாததாக அது இருந்தாலும் இருக்கட்டும்'', என்று கூறினார். இதைக் கேட்ட ஆழ்வான், ''அடியேனுக்கு (எனக்கு) இக்கண் வேண்டாம்'' என்று கூறினார். உடையவர், ''அப்படியல்ல. வரதராஜர் விஷயமாக ஒரு ஸ்தோத்திரம் பாடியே ஆக வேண்டும்'' என்று பலமுறை வற்புறுத்தினார். ஆழ்வானும் ஆசார்யனின் ஆணையை ஏற்று, **''வரதராஜஸ்தவம்''** அருளிச் செய்யத்தொடங்கி, ''நீலமேக நிபமஞ்ஜநபுஞ்ஜ, ஸ்யாமகுந்தளமநந்தசயம் த்வாம், அப்ஜபாணிபதம் அம்புஜநேத்ரம், நேத்ரஸாத்குரு கரீச ஸ தாமே'' (23ம் ச்லோகம்) என்ற அளவு அருளிச் செய்தார். அதில், ''எப்போதும் உன்னை ஸேவித்துக் கொண்டே மகிழ்ந்திருக்க ஞானக்கண் அடியேனுக்கு தந்தருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்தார். அன்றிரவே ஆழ்வானுக்கு வரதராஜர் கனவிலே காட்சி தந்து, ''நீர் வேண்டினபடியே தந்தோம்'' என்றருளிச் செய்தார். ஆழ்வானும் உடனே மகிழ்ந்து எழுந்து நித்ய கர்மாநுஷ்டாநங்களைச் (தினமும் செய்ய வேண்டியவைகளை) செய்துவிட்டு, தொடங்கின வரதராஜஸ்தவத்தை பூர்த்தியாகப் பாடி முடித்தார். அதை உடையவரிடம் விண்ணப்பம் செய்யத் தொடங்கினார். 'நீலமேகநிபம்' என்கிற ச்லோகத்தை வாசிக்கக் கேட்ட உடையவர், ''வாரீர் ஆழ்வான்! இந்த ச்லோகத்தைக் கேட்ட வரதராஜன் கண்டிப்பாக உமக்கு கண்ணைத் தராமலிருக்கமாட்டார், எங்கே கண்ணைக் காட்டும் பார்ப்போம்'' என்றார். திருவாய்மொழியில் 'இப்பொழுதே வந்திடாய் என்று ஏழையேன் நோக்குவனே' (4-7-5) என்ற பாசுரத்திற்கு, 'நம்பிள்ளை'யின் விளக்கவுரையான 'ஈடு முப்பத்தாறாயிரப்படியில்' இது காணத்தகும். ஆழ்வானும் தான் கண்ட கனவைப் பற்றி உடையவரிடம் கூறினார். அந்த கனவில் வரதராஜன் தனக்கு ஞானக்கண்ணை கொடுத்ததையும் கூறினார். அதற்கு உடையவர், ''அப்படியன்று; நாம் இருவரும் நேரில் காஞ்சீபுரம் சென்று வரதராஜனைச் ஸேவித்து ப்ரார்த்தனை செய்துவிட்டு வரவோம்'', என்று சொல்லி ஆழ்வானை அழைத்துக் கொண்டு காஞ்சீபுரம் புறப்பட்டார்.

### ஆழ்வானின் அற்புதமான ஆத்மகுணம் காஞ்சியில் வெளிப்படுதல்

ஆழ்வானும் எம்பெருமானாரும் காஞ்சீபுரம் வந்து சேர்ந்தனர். உடையவரின் ஆணைப்படி ஆழ்வான் வரதராஜஸ்தவத்தை தேவப்பெருமாள் முன்பே விண்ணப்பம் செய்தார். ஸ்தவத்தை முடிக்கும் சமயத்தில் உடையவர் தேவப் பெருமாளை ப்ரதக்ஷிணம் செய்யச் சென்றிருந்தார். வரதராஜன் ஸ்தவத்தை கேட்டு மகிழ்ச்சி அடைந்தார். தேவப்பெருமாள் ஆழ்வானிடம், ''உம்முடைய விருப்பத்தை வேண்டிக் கொள்ளும்!'' என்றார். ஆழ்வான், உடையவர் விரும்பியபடி கண் வேண்டும் என்று கேட்கவில்லை. (தனக்காக எதையும் கேட்கும் குணம் அவருக்கு இருந்ததில்லை). மாறாக, ''நான் பெறப்போகும் பேற்றை நாலூரானும் பெற வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். (நான் பெறும்பேறு என்பது ஆழ்வான் பெறும் மோக்ஷத்தைக் குறிக்கும்). 'எம்பெருமானார் ஸம்பந்தம் பெற்ற அனைவருக்கும் மோக்ஷம் நிச்சயம்' என்கிற திட நம்பிக்கையாலே 'நான் பெறப் போகும் பேறு' என்று ஆழ்வான் கூறியிருக்கிறார். வரதராஜனும் அவ்வாறே தந்தருளினார். (இவ்வாறு தமக்கு கண் வேண்டிக் கொள்ளாமல் நாலூரானுக்கு மோக்ஷம் வேண்டியதின் தேவை என்ன?) சோழ ராஜாவிற்கு இராமாநுசரிடம் கையெழுத்து

வாங்கும் படி சொல்லிக் கொடுத்ததே இந்த நாலூரான் தான். அதனால் தான் ஆழ்வானுக்கு கண்போனது; பெரியநம்பியின் உயிரும் பிரிந்தது; எம்பெருமானாரும் திருவரங்கத்தை விட்டுப் பிரிய நேரிட்டது. இப்படிப் பெரும் பாவங்களைச் செய்த நாலூரானுக்கு நரகம் தான் கிடைக்கும் என்று ஆழ்வான் நிச்சயித்தார். ஆனால் வைஷ்ணவ குலத்தில் பிறந்த ஒருவன் (நாலூரான்) இவ்வாறு படுகுழியில் விழுவது (நரகம் செல்வது) கூடாது என்று இரக்கப்பட்டார். நாலூரானால் கண்ணிழந்த தாம் வேண்டினால் தான் வரதராஜன் அவனுக்கு இரங்கி, நற்கதி (மோக்ஷம்) அளிப்பான் என்று நிச்சயித்து, அவ்வாறு வேண்டிக் கொண்டார் ஆழ்வான். தனக்கு துரோகம் செய்து, தன் கண்போக காரணமாயிருந்த நாலூரானையும் மன்னிக்கும் அளவுக்கு அவனிடத்தில் கூட அன்பு செலுத்த ஆழ்வான் ஒருவரால் தான் முடியும்.

## கண் பெறுதல்

எப்பொழுது நாம் உடையவரின் திருவடியை அடைந்து விட்டோமோ, அப்பொழுதே நமக்கு மோக்ஷம் கிடைப்பது நிச்சயம் என்று அறிந்தவர் ஆழ்வான். அவர் தேவப்பெருமாளிடம் நாலூரானுக்கு நற்கதி வேண்டினார்; வரதராஜனும் அவ்வாறே தந்தார். இதைக் கேட்ட இராமாநுசர் பதறினார்; மனம் நொந்தார். பெருமாளை நோக்கி, "எல்லாம் அறிந்த தேவரீரே என்னுடைய நினைவை நிறைவேற்றவில்லையே!" என்றார். ஆழ்வானை நோக்கி, "நான் கேட்கச் சொன்ன கண்ணைக்கேட்காமல் உபயோகமில்லாத ஒன்றை வேண்டிக்கொண்டீரே!" என்றும் வெறுத்துப் பேசினார். இனி என்ன செய்வது என்று திகைத்து நின்றார். உடையவர் மனக்குறைபட்டு தவிப்பதை உணர்ந்த தேவப்பெருமாள், "நம் இராமாநுசா! ஆழ்வான் என்னையும் உம்மையும் காணும்படிக்கு கட்கண்ணைத் (வெளிக்கண்ணைத்) தருகிறேன்" என்று வரம் தந்தார். அதன் மூலம் பெருமாளை ஸேவித்து, அவர் அணிந்திருந்த நகைகளையும் வஸ்திரங்களையும் (துணிகளையும்), திருமேனி வடிவழகையும் இவையிவையென்று குறித்துக் காட்டினார். எம்பெருமானாரின் திருமேனியின் அழகையும் விவரித்தார். இதைக் கேட்ட இராமாநுசர் ஒருவாறு மகிழ்ந்தார். இருவரும் மீண்டும் ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்தனர்.

## ஸ்ரீரங்கத்தில் உள்ளவர்கள் ஆழ்வான் திருக்குணத்தை நோக்கி வியத்தல்

ஒருநாள் ஸ்ரீரங்கத்தில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோரும் ஆழ்வானிடத்தில் வந்து, "நாலூரான் உமக்கு மட்டும் அல்லாமல் நம் ஸ்ரீவைஷ்ணவ உலகிற்கே பெரும் தீமை விளைவித்தவன். அவனுக்குக் கொடிய நரகம் அல்லவா கிடைக்க வேண்டும்! அவனுக்குப் போய் மோக்ஷம் கேட்டீரே! இது என்ன அநியாயம்!" என்றனர். அதற்கு ஆழ்வான், "அப்படிப்பட்ட பாவங்கள் செய்தவர்களுக்குத் தான் நாம் இரக்கப்பட வேண்டும். "நீரிலேயே வாழும் மீனுக்குத் தண்ணீர் கொடுப்பதால் என்ன பயன்" என்று கூறினார். இந்த பதிலைக் கேட்டு அனைவரும் ஆழ்வானின் மிகவும் உயர்ந்த இரக்ககுணத்தை எண்ணி வியந்தனர். உடையவரிடம் இல்லாத சில நல்ல குணங்கள் கூட ஆழ்வானிடம் இருந்ததை எண்ணி வியந்தனர்.

## ஆழ்வானின் அற்புதமான குணங்கள்

ஆழ்வானிடம் மிக உயர்ந்த குணங்கள் இருந்தாலும், தன்னைத் தாழ்த்திக் கூறிக்கொள்ளுதல் முதலான குணங்களும், பெருமைகளும், நாலாயிர திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களில் அனேக இடங்களில் காட்டப் பட்டிருக்கின்றன. அவைகளில் சிலவற்றைக் காண்போம்.

1) **கல்விச் செருக்கில்லாதவர், தம்மைத் தாமே தாழ்த்திக் கொண்டு மற்றவரை கௌரவிப்பது** முதலிய குணங்களுக்கு ஒரு எடுத்துக்காட்டு:

**"பாரித்தெழுந்த.... தேரில் பாகனாய் ஊர்ந்த தேவன்" (பெரிய திருமொழி 7.5.2)ல் எடுத்துக்காட்டு:** கூரத்தாழ்வான் காலக்ஷேபம் செய்யும் ஸமயங்களில் மூலம் வாசித்து வந்த சிலரிலே, ஒருவர்க்கு ஒரு நூலைப் படித்து, ஆழ்வானிடம் விளக்கம் கேட்க வேண்டியிருந்தது. ஆயினும், தான் ஆழ்வானிடம் விளக்கம் கேட்டுத் தெரிந்து கொள்வது யாருக்கும் தெரியக் கூடாது என்று நினைத்தார். அவர் ஆழ்வானிடம், "நான் உம்மிடம் விளக்கம் கேட்பது யாருக்கும் தெரியக்கூடாது" என்றும் வேண்டிக் கொண்டார். அவர் விருப்பப்படியே, ஒருவருக்கும் தெரியாமல், ஒரு மறைவான இடத்தில் அவருக்கு விளக்கங்களைச் சொல்லி வந்தார். ஆனால் ஒரு நாள், தற்செயலாக ஒருவர் அங்கு வந்து விட்டார். கேட்பவர், "நாம் ஆழ்வானிடம் விளக்கம் கேட்பது வெளிப்பட்டுவிட்டதே" என்று நடுங்கிப் போய் விட்டார். இவர் நடுங்குவதைக் கண்ட ஆழ்வான், சடக்கென, அவர் கையிலிருந்த புத்தகத்தைத் தான் வாங்கி, தான் அவரிடம் விளக்கம் கேட்பதைப் போல் பாவனை செய்தார். அதாவது, அவரை ஆசார்யனாகவும், தன்னை சீடனாகவும் வந்தவர் நினைக்கும் படி செய்துவிட்டார். "ஆழ்வானிடம் தான் கற்பது யாருக்கும் தெரியக்கூடாது" என்று நினைத்தவருடைய எண்ணப்படி, தம்மைத் தாமே தாழ்த்திக் கொண்டு அவரைக் கௌரவித்துள்ளார். கண்ணன், அர்ஜுனனுக்கு ஸாரதியாக தன்னைத் தானே தாழவிட்டது போல், ஆழ்வானும் செய்த படியால், ஸ்ரீபார்த்தஸாரதி எம்பெருமானுக்கு ஸமமாக ஆழ்வானுடைய ஸௌலப்யத்தைப் (எளிமையைப்) 'பெரியவாச்சான்பிள்ளை' இப்பாசுர வ்யாக்யானத்தில் ஒப்பிட்டுள்ளார்.

2) **ஆழ்வானுடைய பார்வை பட்டால் வழி தவறியவர்களும் திருந்தி விடுவார்கள்**

**"பாரித்தெழுந்த...."(பெரிய திருமொழி 7.5.2) பாசுர அவதாரிகை:** உயர்ந்த அந்தணன் ஒருவனுடைய மகனுக்கு, பௌத்த மதத்தவர்களோடு தொடர்பு ஏற்பட்டு, அதனால் தலையை மொட்டை அடித்துக் கொண்டு, பூணூலையும் அறுத்து திரிந்தான். ஒரு நாள், ஆழ்வான் அவனைப் பார்க்க நேரிட்டது. அவருடைய திருக்கண் பார்வையின் மகிமையினால், அவன் மீண்டும் பூணூல் அணிந்து,

குடுமியும் வைத்துக் கொண்டு, பளபளவென்று திருமண் காப்பு (நாமம்) அணிந்தான். இதைக் கண்ட அவனுடைய தந்தை, "ஏன் இந்த மாற்றம்? ஒரு வேளை கூரத்தாழ்வானைப் பார்த்தாயோ?" என்று கேட்டார். அருகிலிருந்தவர், "கூரத்தாழ்வானை பார்த்ததால் தான் மனம் மாற்றம் அடைந்தான் என்பது உமக்கு எப்படி தெரியும்" என்று கேட்டார். அதற்கு அவர், "வழிதவறிச் சென்றவர்களும், ஆழ்வான் திருக்கண் பட்டால், திருந்தி விடுவார்கள்", என்று பதில் அளித்தார்.

## ஆழ்வான் பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு சொன்ன வார்த்தை

ஆழ்வானுடைய பல சீடர்களிலே பிள்ளைப்பிள்ளையாழ்வான் என்பவர் ஒருவர். அவர் நல்ல குலத்தில் பிறந்து நல்ல ஞானமும், செல்வமும் பெற்று உயர்ந்து விளங்கினார். அதனால், சிறிது அஹங்காரத்தால் (செருக்கால்) அடக்கமில்லாமல் திருமாலடியார்களிடத்திலே அபசாரப்பட்டுக் கொண்டிருந்தார். இதைக் கண்ட ஆழ்வான் வருத்தப்பட்டார். "பிள்ளைப்பிள்ளையாழ்வானோ ஞானம் (அறிவு), அநுஷ்டாநம் (சாஸ்த்ரத்தில் சொல்லியபடி நடத்தல்) எல்லாவற்றிலும் சிறந்து விளங்குகிறாரே; ஆனால் இவ்வாறு பாகவத அபசாரப்பட்டு அவருடைய சிறந்த குணத்தின் பெருமையை இழக்கிறாரே!; இந்த அபசாரம் (இறை அடியவர்களை நிந்திப்பது/குறைசொல்வது முதலியன) அவரைக் கீழே தள்ளி இவருடைய வாழ்வையே சிதைத்து விடுமே! இவர் செய்யும் இந்த பாவத்தைத் தடுக்க வேண்டும்" என்று எண்ணினார் கூரத்தாழ்வான். பிள்ளைப்பிள்ளையாழ்வானைப் பார்த்து, "பிள்ளைப்பிள்ளாய், புண்யகாலம் என்று எல்லாரும் பூமி தானம், ஸ்வர்ண(தங்கம்) தானம், வஸ்த்ர தானம் முதலியன செய்கிறார்கள். நீரும் ஒரு புண்ணிய காலத்தில் நீராடி, எனக்கு ஒரு தானம் தர வேண்டும்" என்று ஆழ்வான் கேட்டார். அதற்கு பிள்ளைப்பிள்ளையாழ்வான், "அடியேன் (நான்) எதை தானம் பண்ணுவது? என்னிடத்தில் உள்ள அனைத்தும் எனது ஆசார்யரான உமக்கு அல்லவா சொந்தம்" என்றார். அதற்கு கூரத்தாழ்வான், "உம்முடைய வாயாலும், மனத்தாலும், உடலினாலும் (முக்கரணங்களாலும்) இறை அடியார்களிடம் அபசாரப் படமாட்டேன் என்ற தானம் செய்து தர வேண்டும்" என்று கேட்டார். அப்படியே செய்து கொடுத்தார் பிள்ளைப்பிள்ளையாழ்வான்.

பின்பு ஒருநாள், பழக்க தோஷத்தால், ஒரு பாகவதரிடம் மனத்தாலே அபசாரப்பட (மனதளவில் ஒரு பாகவதரை நிந்தித்தார்) நேர்ந்து விட்டது. உடனே பயந்துவிட்டார்; "நாம் இனி முடிந்தோம்" என்று எண்ணினார். ஆசார்யனுக்கு உறுதி அளித்ததை மீறி விட்டோமே என்று மனம் குமுறினார். தினமும் ஆசார்யனான ஆழ்வான் திருமாளிகைக்குச் செல்லும் இவர், ஆசார்யனிடம் அளித்த வாக்கை மீறி பாகவதபசாரப்பட்டதால் தன் வீட்டிலேயே வருந்திக் கிடந்தார். வழக்கம் போல் ஆழ்வானின் திருமாளிகைக்கு வரும் இவர் இன்று வரவில்லை என்பதை உணர்ந்த கூரத்தாழ்வான், பிள்ளைப்பிள்ளையாழ்வான் வீட்டிற்குத் தானே சென்று விசாரித்தார். என்னே ஆழ்வானின் கருணை(தயை)! பிள்ளைப்பிள்ளையாழ்வான், "நான் ஒரு பாகவதரிடம் மனதளவில் அபசாரப்

பட்டுவிட்டேன். இந்த பொல்லாத அழுக்கு உடம்பை வைத்துக் கொண்டு மனத்தினாலும், வாக்காலும், செயலினாலும், அபசாரப் படமால் இருக்க முடியவில்லையே!" என்று கூரத்தாழ்வானின் திருவடிகளைக் கட்டிக் கொண்டு கதறி அழுதார். ஆழ்வான் இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டானதே! தவறை செய்தவுடன் அதை உணர்ந்து மனதளவில் வருத்தப்படுகிறார் என்றால் இவர் திருந்திவிட்டார் என்று தான் அர்த்தம். அவரைப்பார்த்து கூரத்தாழ்வான், "பிள்ளைப்பிள்ளாய்! மனதினால் ஒரு ஸ்ரீவைஷ்ணவனிடம் அபசாரப்பட்டு, ஐயோ அபசாரப்பட்டுவிட்டோமே என்று எப்பொழுது உணர்ந்து அனுதாபப்படுகிறாயோ, அப்பொழுதே எம்பெருமான், நீ மனதினால் செய்த அபசாரத்தை பொறுத்து அருள்வார். ராஜதண்டம் (அரச தண்டனை) நேரும் என்கிற அச்சத்தினால் உடலினால் ஒருவரிடமுரையும் அவமரியாதை செய்ய மாட்டீர். ஆக, மனதாலும் செய்கையினாலும் உண்டாகும் அபசாரங்களை (குற்றங்களை) உமக்கு கழித்துத் (போக்கித்) தந்தோம். இனி, உம்முடைய வாக்கை மட்டும் நன்றாகக் குறிக்கொண்டு, நல்ல சொற்களை மட்டும் பேசுவீராக!" என்று அருளிச்செய்தார். இதன் மூலம், நாம் அனைவரும் நம்முடைய முக்கரணங்களாலும் (மனம், மொழி, மெய்), அபசாரப்படுவது கூடாது என்பதை உணர்த்தியுள்ளார்.

## ஆழ்வான் பட்டருக்கு ஆசாரியரானது

எம்பெருமானின் அருளால் கூரத்தாழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்கள் பிறந்ததை நாம் ஏற்கனவே கண்டோம். அவர்கள் அவதரித்ததை அறிந்த உடையவர் பெரு மகிழ்ச்சி அடைந்தார். அவர்களைக் காண பதினோராம் நாளன்று ஆழ்வான் திருமாளிகைக்குச் சென்றார். தன்னுடைய பிரதான சீடர்களில் ஒருவரான எம்பாரை நோக்கி, குழந்தைகளை எடுத்து வரச் சென்னார். எம்பாரும் எடுத்து வந்தார். வரும் பொழுது, குழந்தைகளுக்கு திருஷ்டி, தோஷங்கள் (கெட்டது) நடக்காமல், காப்பாக இருக்க 'த்வயம்' என்னும் உயர்ந்த மந்திரத்தை சொல்லிக் கொண்டே வந்தார். குழந்தைகளை உடையவருக்குக் காட்டினார். உடையவரும் மகிழ்ச்சியுடன் ஆனந்தக் கண்ணீர் விட்டு, குழந்தைகளை தன் திருக்கண்களால் அருளோடு குளிர நோக்கினார். அப்போது, அத்தெய்வீக சிசுக்களின் விசேஷ ஒளியைக் கண்டு ஆச்சர்யப்பட்டு, எம்பாரிடம், "கோவிந்தா! (எம்பாரே!) இக்குழந்தைகளிடம் த்வயம் பரிமளிக்கிறதே (உயர்ந்த நறுமனம் வெளிப்படுகிறதே)! இது இப்படி நடக்க என்ன செய்தீர்" என்று வியப்புடன் கேட்டார். அதற்கு எம்பார், "அக்குழந்தைகளை எடுத்து வரும் பொழுது தோஷங்கள் தீண்டாத படிக்கு த்வய மந்திரம் சொல்லிக் கொண்டே வந்தேன்" என்றார். உடையவர் அவரைப் பார்த்து, "நீர் இந்தக் குழந்தைகள் நன்றாக இருப்பதற்காக ஆசார்யன் சிஷ்யனுக்கு உபதேசிக்க வேண்டிய உயர்ந்த மந்திரமாகிய த்வயத்தைச் சொல்லி வந்தீர். எனவே இவர்களுக்கு நீரே ஆசார்யனாக இருக்க வேண்டும்" என்று நியமித்தார். அதன்படியே அத்திருக்குமாரர்களுக்கு எம்பார் தான் ஆசார்யனாக இருந்து ஆசார்யன் செய்ய வேண்டிய எல்லா காரியங்களையும் செய்து, எல்லா பாடங்களையும், விசிஷ்டாத்வைத கொள்கைளையும் சொல்லித் தந்தார். இவ்வாறு எம்பெருமானார் எம்பாருக்கு ஆசார்யன்,

எம்பார் பட்டருக்கு ஆசார்யன். இதையேதான் எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்ஜீயர் என்று நம்முடைய ஆசார்ய பரம்பரையாகக் கூறுகிறோம்.

இப்படியிருக்க கூரத்தாழ்வான் தன் குமாரர்களுக்குத் திருவாய்மொழியின் அர்த்தத்தைக் கற்பித்து வந்தார். ஒரு நாள் "எண்பெருக்கந்நலத்து ஒண்பொருளீறில, வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே" (1-2-10) என்கிற பாசுரம் வந்தது. இந்த பாசுரம் திருமந்திரத்தின் அர்த்தத்தை விவரிக்கிறது. திருமந்திரத்தின் அர்த்தத்தை அவரவர்களின் ஆசார்யனிடத்தில் தான் கேட்டு அறிய வேண்டும். திருக்குமாரர்களுக்கு எம்பார் தான் ஆசார்யன். அவரிடத்தில் தான் கேட்டுக் கொள்ள வேண்டும். எனவே கூரத்தாழ்வான் தன்னுடைய பாடத்தை நிறுத்திக் கொண்டு திருக்குமாரர்களிடம், "இதன் அர்த்தத்தை உங்கள் ஆசார்யனான எம்பாரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்றார். குமாரர்களுக்கு அதன் அர்த்தத்தை விரைவில் அறிந்துக் கொள்ள ஆசை. உடனே எழுந்து நின்று எம்பார் இருக்கும் இடத்தை ஆழ்வானிடம் கேட்டு புறப்படத் தயாராயினர். ஆழ்வானுக்கு "மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்" என்கிற பாசுரத்தின் அர்த்தம் (இந்த உலகில் நம்முடைய உயிர் நிலை இல்லாதது) ஞாபகத்திற்கு வந்தது. திருக்குமாரர்களை நோக்கி, "இந்த உலகில் இந்த நொடியில் இவர்கள் உயிருடன் இருப்பார்கள், இவர்கள் இறப்பார்கள், என்று சொல்லிவிட முடியாது. நீங்கள் எம்பாரிடம் சென்று இதன் அர்த்தத்தை கேட்கும் முன்பு என்ன நிகழுமோ தெரியாது. எனவே இங்கேயே வாருங்கள். நானே உங்களுக்குச் சொல்லுகிறேன்" என்று கூறி திருமந்திரத்தை கூறி இந்த பாசுரத்தின் அர்த்தத்தையும் விளக்கினார். நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் திருமந்திரத்தை உபதேசிப்பவர் தான் நமக்கு ஆசார்யன். எனவே திருக்குமாரர்களுக்கு கூரத்தாழ்வானும் மற்றுமொரு ஆசார்யனாக அமைந்தார். எனவே தான் பட்டர் ஸஹஸ்ரநாமத்தின் விளக்கவுரை செய்யும் போது, தன்னுடைய ஆசார்யர்களின் பெருமையை கூறும் முதல் ச்லோகத்தில் "வந்தே கோவிந்த தாதௌ" (எம்பாரையும், தகப்பனாரையும் தொழுகிறேன்) என்று அருளிச் செய்தார்.

### "சிறுமாமனிசர்" என்ற சொல்லுக்கு ஆழ்வான் பொருள் விவரித்தது

ஒரு நாள் ஆழ்வான் திருவாய்மொழி சேவித்துக் கொண்டிருந்தார். அப்போது 'உறுமோ பாவியேனுக்கு' (8-10-3) என்கிற பாசுரம் வந்தது. அதில் "சிறுமாமனிசராய் என்னையாண்டார் இங்கே திரியவே" என்று வருகிறது. அதைக் கேட்ட பட்டருக்கு அதில் சிறுமாமனிசர் என்கிற வார்த்தையில் சந்தேகம் வந்தது. உடனே ஆழ்வானிடம் இதில் ஒன்றுக்கொன்று முரணாக 'சிறுமை' மற்றும் 'பெருமை' என்கிற இரண்டு குணங்களும் ஒருவரிடத்தில் எப்படிப் பொருந்தும்? என்று வினவினார். அதற்கு ஆழ்வான் ஆலோசித்து, "பிள்ளாய், நல்ல கேள்வியைக் கேட்டுள்ளாய். உனக்கு உபநயநம் (பூணூல் சடங்கு) ஆகாததால், வேத சாஸ்த்ரங்களைக் கொண்டு விடை சொல்ல இயலாது. எனவே, உன் கண் முன்னே எடுத்துக்காட்டுடன் விளக்குகிறேன்" என்றார். உடனே,

ஆழ்வான் சில பெரியோர்களைக் காட்டி, இங்கே திருமேனி (உடல்) சிறுத்து, ஞானத்தில் பெருத்து (சிறந்த ஞானம்) உள்ள 'சிறியாச்சான்' மற்றும் 'அருளாளப் பெருமாள்எம்பெருமானார்' போன்றவர்களை சிறுமாமனிசர் என்று கூறுவதில் தவறில்லையே! என்றார். மேலும், முதலியாண்டான், எம்பார் போன்றவர்கள், இவ்வுலகத்தில் உள்ளவர்களைப்போல், உணவு, நீர் முதலியவைகளை உட்கொண்டாலும், எம்பெருமானிடத்தில் ஈடுபடுவதில் (பெருமாளிடத்தில் பக்தியில் ஆழ்ந்து இருந்தல்), பரமபதத்தில் உள்ள நித்யஸுரிகளைப் (எப்பொழுதும் பரமபதத்திலேயே வாழ்பவர்கள்) போல் பரம பக்தியுடன் இருப்பதால், இவர்களையே ஆழ்வார் " சிறுமாமனிசர்" என்று கூறியுள்ளார் என்று ஆழ்வான் சொன்னார். அதைக் கேட்டு பட்டர் 'தகுந்ததே' என்று ஒப்புக் கொண்டார்.

## ஆழ்வானுடைய குடும்ப காரியத்தைப் பெருமாள் நிர்வாகம் செய்தது

ஆழ்வானின் பிள்ளைகளான பராசரபட்டரும்,சீராமப்பிள்ளையும் (வேதவ்யாஸ பட்டர்), வேத வேதாந்தங்களை, அவைகளின் அங்கங்களுடனும், உப அங்கங்களுடனும், பயின்று அனைத்திலும் நன்றாக தேர்ச்சி பெற்றனர். அவர்கள் திருமணம் செய்துக் கொள்ளும் வயதையும் அடைந்தனர். ஆழ்வானின் மனைவியான ஆண்டாள் ஆழ்வானைப் பார்த்து, "இவர்களுக்கு கல்யாணம் செய்ய வேண்டாமோ?" என்று விண்ணப்பம் செய்தார். அஹங்கார மமகாரங்கள் சிறுதளவும் இல்லாதவர் ('நான்', 'எனது' என்ற எண்ணம் இல்லாமல், ஆசார்யன் சொற்படியே வழுவாமல் நடப்பவர்) கூரத்தாழ்வான். எனவே, ஆண்டாள் கேட்ட இக்கேள்விக்கு தானே முடிவு எடுக்க விரும்பவில்லை. தனது ஆசார்யனான உடையவரிடம் சென்று, "இவர்களுக்குத் திருமணம் செய்விக்க வேண்டுமாமே!" என்று விண்ணப்பம் செய்தார். உடையவரும் தனது ஆசார்யனான பெரியநம்பியின் உறவினர் ஒருவரைக் குறிப்பிட, ஆழ்வான் அவர்களிடம் பெண் கேட்டார். அவர்களும் கொடுப்பதாக முதலில் ஒப்புக் கொண்டு, பின்பு, 'புதிய ஸம்பந்தம் வேண்டாம்' என்று முடிவு செய்து விட்டனர். இப்படியே சில காலம் கழிந்தது.

பிள்ளைகளின் திருமணம் குறித்து மீண்டும் ஆண்டாள் ஆழ்வானை வினவினார். நம்பெருமாளிடம் சென்று நமக்கு நல்ல மருமகள்கள் கிடைக்க வேண்டும் என்று கேட்குமாறு ஆழ்வானிடம் கூறினாள். அதற்கு ஆழ்வான் "நம் பிள்ளைகள் நம்பெருமாளின் பிள்ளைகள். இந்த குடும்பம் அவனுடைய குடும்பம். அவனுடைய குடும்பத்தைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?" என மறுத்தார். ஆண்டாள் உடனே ஆழ்வானைப் பார்த்து, "உம்மிடத்தில் உள்ள ஞானமும், நம் பிள்ளைகளிடம் உள்ள ஞானமும், அவர்களின் குழந்தைகளிடம் சரியாக சென்று சேருவதற்காகத் தான் கேட்கச் சொல்கிறேன்" என்றாள். அதற்கு ஆழ்வான் "நம் பிள்ளைகளை நாளைக்கு நான் ஸந்நிதிக்குச் செல்லும் பொழுது வரச் சொல்லு" என்றார். அவ்வாறே பிள்ளைகளும் மறுநாள் நம்பெருமாளிடம் வந்து நின்றனர். நம்பெருமாள் ஆழ்வானைப் பார்த்து, "ஏதோ

கேட்க ஆசைப்பட்டாற் போல் இருக்கிறதே? சொல்லும்'' என்றார். ஆழ்வான், "ஒன்றுமில்லை இப்பிள்ளைகளுக்கு திருமணம் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறார்கள்'' என்று கூறினார். அதற்கு அரங்கன், "கவலைப்பட வேண்டாம். நானே உங்களுக்கு மருமகள்களை கொண்டு வந்து சேர்க்கிறேன்'' என்றார். அவ்வாறே, நம்பெருமாள் ஏற்கனவே வேண்டாம் என்ற பெரியநம்பியின் உறவினர்களின் கனவிலே தோன்றினார். ஆழ்வானின் பிள்ளைகளுக்கு பெண் கொடுக்குமாறு கட்டளையிட்டார். மறுநாளே, அவர்களே ஆழ்வானை வலியத் தேடி வந்து பெண் கொடுக்க ஒப்புக் கொண்டனர். அவர்களின் இரண்டு பெண்களை முறையே பராசர பட்டருக்கும், சீராமப்பிள்ளைக்கும் கன்னிகாதானம் செய்து கொடுத்தனர். (திருவாய்மொழி 5-5-7 நிறைந்த வன்பழி நங்குடிக்கு) என்ற பாசுரத்தின் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் இதன் சுருக்கத்தை காணலாம். இதனால், ஆழ்வானுடைய குடும்பகாரியமும், எம்பெருமான் பொறுப்பில் இருந்தது என்பது விளங்கும்.

## அருளிச் செயல்களில் ஆழ்வானின் நிர்வாஹம்

நம் ஆசார்யர்கள் எல்லாரும் அனைத்து சாஸ்த்ரங்களிலும் வல்லவர்கள். இருப்பினும், பன்னிரு ஆழ்வார்களின் நாலாயிர திவ்யப்ரபந்தங்களிலேயே பொழுது போக்கினார்கள். அனைத்து சாஸ்த்ரங்களின் அர்த்தங்களும் நாலாயிர திவ்யப்ரபந்தங்களில் எங்கெங்கு சொல்லப்பட்டன என்று ஆராய்ந்து அநுபவித்தார்கள். அதில் சொல்லப்படாத சாஸ்த்ரங்களின் அர்த்தங்கள் எதுவும் இல்லை என்பது நாம் அனைவரும் அறிந்ததே. இப்படிப்பட்ட அநுபவம் ஆழ்வானுக்கு அதிகமாக இருக்கும். நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் பல பாசுரங்களிலே ஆழ்வானுடைய நிர்வாஹம் (பொருள் விளக்கம்) என்று அருமையாகக் கொண்டாடப்படும் இடங்களும் உண்டு. உதாரணத்திற்கு ஒன்றிரண்டு பார்ப்போம்.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் தன்னைப் பெண்ணாக பாவித்து (நினைத்து), சில பாசுரங்களைப் பாடியுள்ளார். அதில் "மாசறுசோதி" (5-3) என்ற திருவாய்மொழியை ஆழ்வான் ஒருமுறை ராஜேந்திரசோழன் என்னுமிடத்திலே அற்புதமாக உபந்யாஸம் (சொற்பொழிவு) நடத்த நேர்ந்தது. அதில் ஏழாம் பாசுரத்தில் உள்ள "தலையில் வணங்கவுமாங்கொலோ தையலார் முன்பே'' என்பதற்கு அர்த்தத்தை சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது, 'ஆமருவி நிரைமேய்த்தான் நம்பியார்' என்ற பெயருடைய 100 வயது பெரியவர் நடுங்க நடுங்க எழுந்து நின்று, "ஸ்வாமிந், தலைவி தோழியிடம் சொல்லுகிற இப்பாசுரத்தில், தலைவி தலைவனைத் தலையால் வணங்குவதாக வருகிறதே! அவ்வாறு வணங்குவது என்பதுண்டோ?'' என்று கேட்டார். அதற்கு ஆழ்வான் "ஸ்ரீராமாயணத்தில் சீதை அனுமனிடம் செய்தி சொல்லி அனுப்புகிறாள். அதை 'கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச சிரஸாசாபிவாதய' என்ற ஸ்ரீராமாயண ச்லோகம் விவரிக்கிறது. அதன்படி 'சிரஸாச அபிவாதய (எனக்காக அவரைத் தலையால் வணங்கு)' என்கிற ச்லோகத்தைச் சொல்லி,

இதன் மூலம் தலைவி தலையால் வணங்குவது என்பது உண்டு" என்று விளக்கினார். இதைக் கேட்டு அப்பெரியவர் பெருமகிழ்ச்சி அடைந்தார்.

மேலும், திருவாய்மொழி 9-1 அவதாரிகையில், "ஆப்பான் திருவழுந்தூர் அறையர்" ஆச்ரயித்ததும், திருவாய்மொழி கேட்டதும் ஆழ்வானோடு. அதில், "சயமே அடிமை தலை நின்றார்" என்றது "ஸ்ரீ பரதாழ்வான்" போல்வாரை என்பதும், "நீக்கமில்லா அடியார்" என்றது "இளையபெருமாள்" போல்வாரை என்பதும், "கோதில் அடியார் (குற்றமில்லாதவர்)" என்றது "ஸ்ரீ சத்ருக்னாழ்வான்" போல்வாரை என்பதும், ஆழ்வானின் நிர்வாஹம். மேலும், திவ்யப்ரபந்த விளக்கவுரைகளில் பல இடங்களில் இது போன்ற ஆழ்வானின் நிர்வாஹங்களைக் காணலாம்.

## ஆழ்வான் எழுதிய நூல்கள்

திருமாலிருஞ்சோலை யாத்திரையில் ஆழ்வான் மூன்று ஸ்தவங்கள் அருளிச் செய்தார். பிறகு எம்பெருமானார் ஆணைப்படி வரதராஜஸ்தவம் அருளிச் செய்தார். அதன்பிறகு ஸ்ரீஸ்தவம் அருளிச் செய்தார். ஆழ்வான் அருளிச் செய்த நூல்களில் இந்த பஞ்சஸ்தவங்கள் மிகவும் புகழ் பெற்றவை. இவருடைய குமாரரான பட்டர் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு விளக்கவுரை எழுதினார். அதில் 'அவிஜ்ஞாதா' என்கிற திருநாமத்தை விளக்குகிறார். அப்போது "ஸர்வஜ்ஞதாம் ஏவமுபாலபாமஹே த்வம்ஹ்யஜ்ஞ ஏவ ஆச்ரிததோஷ ஜோஷணஃ" என்கிற ச்லோகத்தை எடுத்துக்காட்டுகிறார். இந்த ச்லோகம் தம்முடைய திருத்தகப்பனாரான ஸ்ரீகூரத்தாழ்வான் அருளிச் செய்ததாகவும் (அத ஏவஹி தாதபாதா: என்று தொடங்கி) கூறுகிறார். இந்த ச்லோகம் பஞ்சஸ்தவத்தில் வரவில்லை. இதைப் பார்க்கும் பொழுது, ஆழ்வான் பஞ்சஸ்தவங்களைத் தவிர வேறு சில ஸ்தோத்ரங்களும் அருளிச் செய்திருக்கிறார் என்பதை அறியலாம்.

மேலும் ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்த ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோக அதிகாரத்தில் "பட்டரும் ஆழ்வானும் தந்தாங்கள் அருளிச் செய்த நித்யங்களிலே" என்று காணப்படுகிறது. இதைப் பார்க்கும் பொழுது ஆழ்வான் நித்யக்ரந்தம் (தினமும் செய்ய வேண்டிய செயல்களின் வழிமுறை) ஒன்று அருளிச் செய்துள்ளார் என்றும் விளங்குகிறது. ஆனால் அந்த நூல் நமக்குக் கிடைக்கவில்லை. மேலும், மேற்கூறிய அவ்விடத்திலேயே "ஆழ்வானுடைய சரமச்லோக விளக்கவுரையிலும் இவ்வளவே விவக்ஷிதமாகையால் (நோக்கமாகையால்) ஒரு விரோதமும் இல்லை" என்கிற வரிகளும் இருக்கிறது. இதனால் ஆழ்வான் சரமச்லோக விளக்கவுரை போல ஒரு நூல் அருளிச் செய்துள்ளார் என்று தெரிகிறது. இதுவும் நமக்குக் கிடைக்கவில்லை.

மேலும், "யமகரத்நாகரம்" என்கிற அற்புதமான ஒரு நூல் புகழ் பெற்று விளங்குகிறது. இது ஸ்ரீகிருஷ்ணாவதார சரித்திரங்களை முழுக்கப் பேசுவதொரு யமகமயமான ('யமகம்' என்கிற செய்யுள் நடையுடன்) ஸம்ஸ்க்ருத காவியம் - பதினாறு

பகுதிகளை உடையது, இது சிறந்த விளக்கவுரையுடன் தெலுங்கு எழுத்தில் பதிப்பு செய்யப் பெற்றிருக்கின்றது. இதுவும் ஆழ்வான் எழுதிய (சில அபிப்ராய பேதங்கள் உள்ளன) நூலாகும் என்று ஸ்ரீ.உ.வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஆழ்வான் வைபவப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது. நூலில் உள்ள சொற்களின் சுவையையும், அர்த்தத்தின் சுவையையும் பார்க்கும் பொழுது, இந்த நூலை இயற்றியவர் ஆழ்வானைத் தவிர வேறு யாரையும் நினைக்கத் தோன்றவில்லை. ஆகவே யமகரத்நாகரமும் அதன் விளக்கவுரையும் ஆழ்வான் ஸ்ரீஸூக்திகளே என்று கொள்ளலாம் என்கின்றனர் பலர்.

"கூரேச விஜயம்" என்கிற ஒரு நூலும் ஆழ்வான் அருளிச் செய்ததாகச் சிலர் சொல்லுவதுண்டு, ஆனால் சிலர் 'இல்லை' என்கின்றனர். ராஜ ஸபையில் ஆழ்வான் சோழராஜாவிற்கு எடுத்துக் கூறிய விளக்கங்களையும், நம்முடைய சமயக் கொள்கைகளின் விளக்கங்களையும், ஆழ்வானுக்குப் பிறகு அவதரித்த வேறு ஒருவர் தான் தொகுத்து 'கூரேச விஜயம' என்று வெளியிட்டார் என்றும் சிலர் கூறுவதுண்டு. இதைப்பற்றிப் பெரியோர்களிடம் கேட்டுத் தெளிவு பெற்றுக் கொள்க.

### இராமாநுசருக்கும் ஆளவந்தாருக்கும் என்ன வித்யாசம்? - ஆழ்வானின் கூற்று

மற்றொரு சமயம் சீடர்கள் ஆழ்வானிடம், "ஆளவந்தாருக்கும் நம் இராமாநுசருக்கும் என்ன வித்தியாசம் கண்டீர்?" என்று ஒரு கேள்வி கேட்டார்கள். ஆழ்வான் உடனே பதில் கூறவில்லை. ஒரு இரவு முழுவதும் ஆராய்ச்சி செய்து பார்த்தார். மறுநாள் சீடர்களைக் கூப்பிட்டு , "பெரிய பிராட்டியாருக்கு ஏற்றமா? பெரிய பெருமாளுக்கு ஏற்றமா?" என்று தாம் ஒரு கேள்வி கேட்டார். சீடர்கள் ஆழ்வானிடம், " 'நண்பன் என்று சொல்லிக்கொண்டு, வேஷமிட்டு வந்தாலும் போதும். அவனை என்னிடத்தில் சேர்த்துக் கொள்வேன்' என்று இராமன் சொல்லி இருக்கிறான். பிராட்டி (சீதை) ஒரு படி மேலே சென்று, 'பாவங்களோடே வந்தாலும் கூட அவனை நான் கைவிடப்போவதில்லை' என்கிறாள். ஆக, இதிலிருந்து பிராட்டி (தாயார்) தான் உயர்ந்தவள் என்று தோன்றுகிறது" என்றனர். ஆழ்வான் உடனே, "ஆளவந்தாரை விட எம்பெருமானார் தான் உயர்ந்தவர். ஏனென்றால், பெருமானைப் போல ஆளவந்தார் எவனுக்கு யோக்யதை இருக்கிறதோ அவனுக்குத் தான் எதையும் கொடுப்பர். ஆனால் இராமாநுசரோ, பிராட்டியைப் போல, ஆசை உடையவர்கள் எல்லாரும் வாருங்கள் என்று கூறி 'பேசி வரம்பறுத்தார் பின்' என்று மணவாளமாமுனிகள் கூறியபடி, இவ்வளவு அவ்வளவு என்று இல்லாமல் எவனுக்கும் கொடுக்கிறோம் என்று சொல்லி இருக்கிறார். இராமாநுசருக்கு முன்புள்ள ஆசாரியர்கள் (ஆளவந்தார் உட்பட) எல்லாம் ஓராண்வழியே (அவர்களுக்குள்ளேயே, சிஷ்யர்களுக்கு மட்டும், அவர்களை பரீட்சை செய்து, அவர்கள் கேட்கத் தகுந்தவர்களா என்று முடிவு செய்து) ஸம்ப்ரதாய அர்த்தங்களை சொல்லி வந்தனர். ஆனால், இராமாநுசரோ, அந்த ஒரு கட்டுப்பாட்டைத் தளர்த்தி, "விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப் பட்டவர்களுக்கெல்லாம்" அந்த விஷயங்களை சொன்னார். அதனால், ஆளவந்தாரை விட இராமாநுசருக்கு தான் ஏற்றம் என்று தெரிவித்தார்.

## மறுபிறவி என்கிற கைவிலங்கு : ஆழ்வானின் விளக்கம்

ஆழ்வானுக்கு சிறு வயது முதல் சிநேகிதன் ஒருவர் இருந்து வந்துள்ளார். அவருக்கு பல நாட்களாகக் குழந்தை பிறக்கவில்லை. பிறகு ஒருநாள் அவருக்கு குழந்தை பிறந்தது. அதைக் கேள்விப்பட்ட ஆழ்வான் அந்த குழந்தையைப் பார்க்கச் செல்லவில்லை. நண்பனையும் விசாரிக்கவில்லை. நேராக நம்பெருமாள் முன் சென்று, "பெருமானே! இந்தப் பிள்ளைக்கு நல்லது நடக்கவேண்டும்" என்று வேண்டினார். ஆழ்வானின் மனைவியான ஆண்டாளுக்கு ஒன்றும் புரியவில்லை. குழந்தை வெகு தூரத்தில் இருக்கிறது. நண்பனையும் போய்ப் பார்க்கவில்லை, பிள்ளையைப் பற்றி ஒன்றும் கேட்கவில்லை, பிள்ளை பிறந்ததா என்று நண்பனிடமும் விசாரிக்கவில்லை, திடீரென்று நம்பெருமாள் முன்னே சென்று ஏதோ சொல்கிறாரே? என்ன சொல்கிறார் என்று ஆண்டாளுக்குப் புரியவில்லை. ஆழ்வானைப் பார்த்து "ஸ்வாமி! என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்? பிள்ளையைப் போய்ப் பார்த்து நல்லது சொல்ல வேண்டாமா? இங்கு வந்து நம்பெருமாளிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறீரே?" என்றாள். அதற்கு ஆழ்வான் ஆண்டாளிடம், "நீ புரியாமல் பேசுகிறாய். உதாரணத்திற்கு, ஒருத்தன் கையில் விலங்கு போடப்பட்டுள்ளது. அவன் கஷ்டப்படுகிறான். விலங்கை நீக்க வேண்டும் என்றால் யாரிடம் பேச வேண்டும்? விலங்கு போட்டுக் கொண்டிருப்பவனிடம் பேசி உபயோகம் இல்லை. விலங்கை போட்டவனால் தான் அதை கழற்ற முடியும். அதேபோல், இந்தக் குழந்தை எப்பொழுது இந்தப் பூமியில் பிறந்ததோ, அப்பொழுதே ஸம்ஸாரம் (பிறப்பு இறப்பு என்கிற சுழல்) என்கிற விலங்கு இடப்பட்டுள்ளது. இந்த பூமியில் வாழ்ந்து துடிக்கப் போகிறான். இதை இட்டவன் நம்பெருமாள். அவனிடத்தில் சொன்னால் தான் இந்த விலங்கு அவிழ்க்கப்படும். (நாம் அனைவரும் சென்ற ஜன்மத்தில் மோக்ஷம் அடையவில்லை. அதனால் தான் இந்த ஜன்மத்தில் மறுபிறவி எடுத்துள்ளோம். அவ்வாறு இந்த ஜன்மத்தில் பிறந்தது ஸம்ஸாரம் என்ற கடலில் விழுந்து கிடப்பதற்குக் காரணமே நாம் செய்த பாவ புண்ணியங்கள் தான். இந்த கர்மாக்களிலிருந்து நம்மை இந்த ஸம்ஸார கடலில் இருந்து விடுவிப்பது நம்பெருமாளிடம் தான் உள்ளது. இதைத்தான் ஆழ்வான் இவ்வாறு தெரிவிக்கிறார்). பிறந்த குழந்தையைப் பார்ப்பதாலோ, அல்லது ஆழ்வானுடைய நண்பனை விசாரிப்பதாலோ, ஒரு பயனும் இல்லை" என்றார். இவ்வாறு தன் வாழ்க்கையில் நடந்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நம்முடைய வைணவ சித்தாந்தத்தின் மகிமைகளை விளக்கிக் காட்டியுள்ளார். இதனால், எல்லாரும் நல்ல கதியை அடைய வேண்டும் என்கிற பரந்த நோக்கம் கொண்டவர் ஆழ்வான் என்பது தெளிவாகிறது.

## முக்குறும்பறுத்தவர் ஆழ்வான்

ஆழ்வான் கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு மற்றும் குலச் செருக்கு ஆகிய முக்குறும்பு என்கிற படு குழியைக் கடந்தவர். இவருக்கு உயர்ந்த கல்வி கேள்விகளால் ஞானமிருந்தும், வித்யா மதம் (நான் அதிகம் படித்தவன். என்னைவிட படிப்பில் சிறந்தவன் இல்லை என்கிற எண்ணம்), தன மதம் (நான் தான் அதிகம் செல்வம்,பணம் உடையவன் என்கிற எண்ணம்), ஆபிஜாத்ய மதம் (நான் உயர்ந்த குலத்தில் பிறந்தவன்

என்கிற இறுமாப்பு) ஆகிற மூன்றையும் கடந்தவர் (எள்ளளவும் இல்லாதவர்) கூரத்தாழ்வான். இந்த மூன்றும் இருந்தால் நம்மை நரகமாகிற குழியில் தள்ளிவிடும். அனைத்து சாஸ்த்ரங்களையும், வேதங்களையும் படித்தவர் ஆழ்வான். ஸ்ரீபாஷ்யத்தை முழுவதும் ஒரு வரி விடாமல் அறிந்தவர் ஆழ்வான். இருப்பினும் ஒரு துளி கூட "நான் படித்தவன்" என்கிற இறுமாப்பு இருந்ததில்லை. இவை அனைத்தும் இராமாநுசரின் திருவடி பலத்தால் தான் தனக்குக் கிடைத்தது என்று நினைத்து வாழ்ந்தவர் ஆழ்வான். அதே போல், இவரிடம் இருந்த செல்வத்திற்கு அளவே கிடையாது. இவருடைய திருமாளிகை கதவுகளின் மணி ஓசை காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாளுக்குக் கேட்டது என்றால் அந்த மணியின் பெருமை என்ன? இவர் செல்வம் எவ்வளவு இருந்திருக்க வேண்டும்? இருப்பினும், ஒரு துளி கூட இறுமாப்பு (செல்வச் செருக்கு) இருந்ததில்லை. அதையும் துறந்து இராமாநுசரின் திருவடிகளை அடைந்தார். மேலும், இவர் பிறந்த குலம் பெருமை வாய்ந்த "ஹாரீத" குலம். இருப்பினும், தான் உயர்ந்த குலத்தில் பிறந்தவன் என்று எண்ணியதில்லை. இவ்வாறு ஆழ்வான் முக்குறும்புகளையும் கடந்தவர் என்பதைத் தான் இராமாநுசநூற்றந்தாதியில் "வஞ்சமுக்குறும்பாம் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின்" என்று பாடியுள்ளார் திருவரங்கத்தமுதனார்.

## ஆழ்வான் திருநாட்டுக்கு நியமநம் பெறுதல்

இங்ஙனே ஆழ்வான், உலகோர்கள் உய்யும்படி பல நல்ல நூல்கள் அருளிச் செய்து, நல்லறிவு நல்லொழுக்கம் முதலியவற்றால் (ஞானம், அநுஷ்டானங்களால்) உயர்ந்து விளங்கி வந்தார். அந்நாளில், எம்பெருமானார் மடத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியின் காலக்ஷேபம் (திருவாய்மொழியின் அர்த்தங்களை நம் முன்னோர்கள் எழுதிவைத்துள்ளதை உடையவர் தம் சீடர்களுக்கு விளக்கிச் சொல்லுதல்) நடந்து வந்தது. உடையவர் 'சூழ்விசும்பணிமுகில்' என்கிற திருவாய்மொழியில் 'முடியுடைவானவர் முறை முறை எதிர்கொள்ள' என்கிற பாசுரத்தின் அர்த்தத்தை விளக்கிக் கொண்டிருந்தார். அதன் அர்த்தமாவது, பரமபதத்திற்கு முதலில் செல்பவர்கள், பிற்காலத்தில் வருபவர்களை, வரவேற்று, உபசரிப்பார்கள். இவ்வாறு உடையவர் விளக்கம் கூறியதை உடனிருந்து கேட்டார் ஆழ்வான். இதைக் கேட்ட ஆழ்வான், எனக்கு முன்னால் உடையவர் இறந்துவிட்டால் அவர் முதலில் பரமபதம் சென்று விடுவார். நான் அவருக்கு பின்னால் தான் செல்ல முடியும். அவ்வாறு நடந்தால், உடையவர் என்னை பரமபதத்ததில் எதிர்கொண்டு, வரவேற்று உபசரிப்பார். ஒரு ஆசார்யன் தன் சிஷ்யனை உபசரிப்பது நல்லதல்ல. அவ்வாறு நடந்தால், அது தனக்கு அபசாரம் ஆகிவிடும், என்று எண்ணினார். இவ்வாறு நடக்காமல், நாம் தான் பரமபதத்தில் முதலில் சென்று எம்பெருமானாரை வரவேற்க வேண்டும் என்று முடிவு செய்தார். இதை உடையவரிடம் சொல்லவில்லை. நேராக ஸ்ரீரங்கநாதர் முன்னே போய் நின்றார். ஆழ்வான் வாய் திறக்கவில்லை. இதைக் கண்ட பெருமாள், ஆழ்வானை நோக்கி, "ஏதோ ஒன்று சொல்ல வந்ததைப் போல் உள்ளதே?" என்று கேட்டார். ஆழ்வானும், ஒரு ச்லோகத்தை மிகவும் உருக்கமாக விண்ணப்பம் செய்தார். இதைக் கேட்ட பெருமாள் மகிழ்ச்சி அடைந்தார்.

பெருமாள் ஆழ்வானை நோக்கி, "உனக்கு வேண்டியதை எல்லாம் தருகிறேன். என்ன வேண்டும் என்று கேட்கவும்" என்றார். அதற்கு ஆழ்வான், "ஏற்கனவே எல்லாம் தந்துவிட்டீரே" என்றார். அதற்கு பெருமாள், "அப்படி அல்ல. இப்போதும் வேண்டிக் கொள்ளும். நம் பிராட்டிகளின் மேல் ஆணை, நம் இராமானுசன் மேல் ஆணை, நீர் வேண்டிக் கொள்வதைத் தருகிறேன்" என்றார். ஆழ்வானும், "இந்த அழுக்கு உடம்பை விடுவித்து, அடியேனை பரமபதத்திற்கு அழைத்துச் சென்று, எப்பொழுதும் உம்மை அநுபவிக்க அருள் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தனை செய்தார். இதைக் கேட்ட அரங்கன், அந்தோ ஆழ்வானைப் பிரிய வேண்டுமே என வருந்தினார். இந்த வரத்தை தவிர்த்து வேறு வரம் வேண்டிக் கொள்ளும் என்று வருத்தத்துடன் கூறினார். அதற்கு, "கேட்கின்ற வரத்தைத் தருகிறேன் என்று கூறிவிட்டு, இப்பொழுது மறுக்கலாமா? 'ஒன்றே உரைப்பான்! ஒரு சொல்லே சொல்லுவான்!' என்ற பெருமை உமக்கு உண்டு. அதைப் பொய்யாக்கலாமோ? வேண்டிக் கொண்டதையே தந்தருள வேண்டும்" என்று ப்ரார்த்தித்தார். பெருமாள், இனி செய்வது ஒன்றுமில்லை என்று துணிந்து, "உமக்கும், உம்முடைய திருநாமம் சொல்லும் அனைவருக்கும், உம்முடைய ஸம்பந்தம் பெற்ற அனைவருக்கும் மேல்வீடு (மோக்ஷம்) தந்தோம்" என்று அருளிச் செய்தார். மேலும், ஆழ்வானுக்கு, திருப்பரிவட்டமும், தளிகை ப்ரஸாதமும், புஷ்ப மாலையும், திருக்கைச் சிறப்பும் (பெருமாளின் கையில் ஒற்றி எடுத்த சந்தனம்) தந்து விடை கொடுத்து அருளினார்.

## ஆழ்வான் திருநாட்டுக்கு நியமனம் பெற்றதை எம்பெருமானார் உணர்ந்து மகிழ்தலும் வருந்துதலும்

ஆழ்வான் இவ்வாறு வரம் பெற்றது எம்பெருமானார் காதுக்கு எட்டியது. உடனே அவருக்கு தன்னுடைய பழைய கதை ஞாபகத்திற்கு வந்தது. முன்பு ஒரு முறை, இராமானுசர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று வைணவச்சமய ரஹஸ்யங்களின் அர்த்தங்களைக் கேட்டறிந்தார். அர்த்தங்களைக் கூறிவிட்டு திருக்கோட்டியூர் நம்பி, எம்பெருமானாரிடம் "இவற்றை எவரிடமும் கூறக்கூடாது", என்று கட்டளை இட்டார். நாம் அறிந்த அர்த்தங்களை அனைவரும் அறிய வேண்டும், அனைவரும் அதை கேட்டு மோக்ஷம் அடையவேண்டும், என்று எண்ணி, ஆசார்யன் கட்டளையை மீறி, உடனே, அதே திருக்கோட்டியூரிலேயே, அதைக் கேட்க ஆசையுள்ளவர்கள் அனைவரையும் அழைத்து, அவ்வர்த்தங்களை வெளியிட்டார். இவ்வாறு அர்த்தங்களை சொல்லிக் கொடுத்த ஆசார்யன் ஆணையை மீறியதால் தனக்கு நரகம் தான் கிடைக்கும், மோக்ஷம் பெற வாய்ப்பில்லை என்று உடையவர் எண்ணியிருந்தார். இப்போது, ஆழ்வானோடு ஸம்பந்தம் உடைய அனைவருக்கும் மோக்ஷம் என்று நம்பெருமாள் வரம் தந்துள்ளார். ஆகையால், எனக்கும் ஆழ்வானின் ஸம்பந்தம் உண்டல்லவா? எனவே எனக்கும் மோக்ஷம் கிடைப்பது உறுதியாகிறது என்று எம்பெருமானார் மகிழ்ச்சி அடைந்தார். உடனே மடத்தை விட்டு வெளியில் வந்தாராம். ஸந்நியாஸிகள் மகிழ்ச்சி மற்றும்

வருதத்தை காட்டிக் கொள்ளக் கூடாது. ஆனால் எம்பெருமானாரோ வெளியில் வந்து, தன்னுடைய காஷாய உத்ரியத்தை (மேல் ஆடையை) வானில் தூக்கி எறிந்து ஆனந்தக் கூத்தாட ஆரம்பித்து விட்டார்.

பொதுவாக ஆசார்யன் ஸம்பந்தத்தினால் சிஷ்யர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும். ஆனால் இங்கோ, நமக்கு மோக்ஷம் உண்டோ, இல்லையோ என்று நினைத்திருந்த எம்பெருமானாருக்கு, சிஷ்யன் கூரத்தாழ்வானின் ஸம்பந்தத்தால் மோக்ஷம் ஏற்பட்டுள்ளது. இதுதான் கூரத்தாழ்வானுக்கு இருக்கிற பெருமை. இராமாநுசருக்கு முற்பட்டவர்கள் (முன்னோர்கள்) எல்லாம் அவரின் திருமுடி ஸம்பந்தத்தால் (இவருடைய ஆசார்யன், ஆசார்யனின் ஆசார்யன், மற்றும் பல முன்னோர்கள் எல்லாம் உடையவரின் திருமுடி ஸம்பந்தம் பெற்றவர்கள்) மோக்ஷம் பெற்றவர்கள். இராமாநுசருக்கு பின்பு பிறந்தவர்கள் எல்லாம் (பிற்பட்டவர்கள்) அவரின் திருவடி ஸம்பந்தத்தால் மோக்ஷம் அடைந்தனர். அனைவருக்கும் மோக்ஷம் அளிக்கவல்ல தகுதி பெற்ற இராமாநுசருக்கே கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தால் தான் மோக்ஷம் என்று இராமாநுசர் சொல்லிக் கொள்கிறார் என்றால் கூரத்தாழ்வானின் பெருமையை என்னவென்று வர்ணிப்பது? இந்த நிகழ்ச்சியை ஒட்டித்தான் கீழ்க்கண்ட ச்லோகம் பிறந்தது. இதுவே ஆசார்ய அபிமானம் என்று கூறப்படுகிறது.

அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய, பூர்வே
மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு: |
ஸோயம் ராமநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம்
யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத: ||

**இதன் பொருள்** - தம்முடைய சிஷ்யர்களைத் தம்முடைய திருவடி ஸம்பந்தத்தாலும், தம்முடைய முன்னோர்களை தமது திருமுடி ஸம்பந்தத்தாலும் மோக்ஷம் பெறச் செய்கிறார் இராமாநுசர். அவரே, ஆழ்வானின் ஸம்பந்தத்தாலே தமக்கு முக்தி உறுதி என்று எண்ணினார் என்றால், இவ்வாழ்வானுடைய சிறப்பு பேசி முடிக்க முடியாதது என்பதாகும்.

"யத்பாதாப்ஜாநுபத்ந : ஸகல பவப்ருதாம் கல்பதே முக்திஸித்த்யை, யத்ஸம்பந்தாத் கரஸ்தாமமநுத ஸ யதிக்ஷமாபதி: ஸ்வஸ்யமுக்திம் தஸ்மிந் கூராதிநாதே" என்று வரவரமுநி சதகத்தில் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் அருளிச் செய்தார். இதனால், ஸதாசார்யனின் ஸம்பந்தம் போலே ஸச்சிஷ்யனின் ஸம்பந்தத்தாலும் மேல்வீடு பெறலாம் என்று விளங்குகிறது.

இவ்வாறு தனக்கு கிடைத்த பேற்றை நினைத்து மகிழ்ந்த எம்பெருமானார், உலகுக்கு ஒருயிரான ஆழ்வானை இழந்து நாம் எவ்வாறு உயிர் வாழ்ந்திருப்பது என்று

மிகவும் மனம் நொந்து, சிஷ்யர்களைக் கூட்டிக் கொண்டு ஆழ்வானின் திருமாளிகைக்குச் சென்றார். ஆழ்வானைப் பார்த்து, "என்ன காரியம் செய்தீர்! என்ன காரியம் செய்தீர்! இப்படி என்னைப் படுகொலையடிக்கலாமோ?" என்று கேட்டார். ஆழ்வானும் "பரமபதத்திற்கு அடியேன் முன்னே சென்று உம்மை (எம்பெருமானரை) நீர் எழுந்தருளும்பொழுது வரவேற்கத்தான் இவ்வாறு வரம் பெற்றேன்" என்று விளக்கினார். உடையவர், "ந சாஸ்த்ரம் நைவ சக்ரம:" என்று அடைவுகெட்டிருக்கும் (உலக வழிமுறைகள் பொருந்தாத) பரமபதத்தில், நீர் அடைவு (உலக வழிமுறைகளை) தேடுவதே (தேடுவீரோ)! இப்படியும் ஒரு சேஷத்வ காஷ்டையுண்டாவதே (அடிமைத் தனத்தின் எல்லை உண்டாவதே)! என்று மிகவும் மனம் வியர்த்தார். கண்ணும் கண்ணீருமாய் ஆழ்வானை அணைத்துக் கொண்டார். விம்மல் பொருமலாய், மனம் குலைந்து, ஆழ்வானை நோக்கி, "ஐயோ ஆழ்வான்! உயிர் நிலையான உம்மை இழந்து நான் எவ்வாறு வாழ்வது! என்னையும் உம்முடன் கொண்டுபோக நீர் நினைக்கவில்லையே! என்னைவிட்டு அகன்றுபோக உமக்கு ருசிப்பதே! ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள ஸ்ரீமந்நாராயணனும், மற்றும் அங்குள்ளவர்களும் என்ன நோன்பு நோற்றார்களோ! இங்கு உறங்குகிற நம்பெருமாளும் நானும் என்ன பாவம் பண்ணினோமோ! 'இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும், அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!' என்ற பாசுரத்தையும் மறந்துவிட்டீரே? ஐயோ! என் செய்தீர்! இனி உம்முடைய மனம் கலங்கும்படி சொல்லி என்ன பயன்? உம்முடைய மோக்ஷபயணத்துக்கு நான் நடுவில் தடங்கலாய் இருக்கலாமோ? சுகமாக ஸ்ரீவைகுண்டத்திற்கு எழுந்தருள்வீர்" என்று கூறி ஆழ்வானின் காதுகளில் எம்பெருமானார், த்வய மஹா மந்திரத்தைச் சொன்னார்.

உடனிருந்த சிஷ்யர்கள் எம்பெருமானாரிடம், "நீர் செய்தது சரிதானா? த்வயம் என்பது ஒரு தடவை ஆசார்யன் நமக்கு ஸமாச்ரயணம் (ஆசார்யன் சிஷ்யன் என உறவு ஏற்படுத்தும் சடங்கு) செய்யும் பொழுது நம் காதுகளில் கூறுவது. மறுபடியும் மறுபடியும் இந்த த்வய உபதேசம் பெறுவது முடியாது. கடைசி காலத்தில் (இறக்கப் போகும் தருவாயில்) ஸ்ம்ருதி என்பது (இறக்கும் தருவாயில் பகவானை நினைத்தே ஆக வேண்டும் என்பது) நம் ஸம்ப்ரதாயத்தில் கிடையாது. ஆழ்வானின் கடைசி காலத்தில் த்வயத்தை மறுபடியும் ஏன் சொன்னீர் என்று சிஷ்யர்கள் கேட்டனர். அதற்கு எம்பெருமானார், "அந்திம ஸ்மிருதி தான் வர்ஜனம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒருநாள் பகவானைப் பார்த்து **'சரணம்'** என்று சொல்லிவிட்டால், கடைசி நாள் கட்டையைப் போல் இருக்கும் பொழுது மறுபடியும் 'சரணம், சரணம்' என்று சொல்லுவது கிடையாது. என்றைக்கு ஸமாச்ரயணம் ஆகி விட்டதோ (என்றைக்கு த்வயத்தை பெற்றானோ), அன்றே சரணாகதி ஆகிவிட்டது; அன்றே மோக்ஷம் நிச்சயிக்கப்பட்டது. அதற்குமேல், அந்திம தசையில் போய் மறுபடியும் ஒருமுறை இவன் நினைக்க வேண்டிய அவசியம் கிடையாது. இவனுக்கு மோக்ஷம் தந்தருள வேண்டும் என்று பகவான்

நினைப்பான்'' என்றார். மேலும், "நான் ஒன்றும் அந்திம ஸ்மிருதிக்காக ஆழ்வான் காதுகளில் த்வயம் சொல்லவில்லை. ராஜகுமாரர்களுக்கு பச்சை கற்பூரத்தை எப்பொழுதும் வாயில் போட்டுக் கொண்டே இருக்க வேண்டுமாம். அதை அவர்கள் மென்று கொண்டே இருப்பார்கள். அதைப் போல் கூரத்தாழ்வானுக்கு த்வய மஹா மந்திரம். எப்பொழுதும் ஆழ்வான் த்வய மஹா மந்திரத்தைத்தான் மனதில் சொல்லிக் கொண்டிருப்பார். அதைப் போல் தான் இப்பொழுது அவர் காதில் அதைக் கூறினேன். ராஜகுமாரர்களுக்கு கற்பூரம் இல்லாவிட்டால் நாக்கு வறண்டு போகும். அது போல் ஆழ்வானுக்கு த்வயம் இல்லாத பொழுது நெஞ்சு வறளும்'' என்று அருளிச் செய்து ஆழ்வானுடைய முதுகைத் தடவி, அஞ்ஜலித்து விடை கொடுத்தருளினார்.

## ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளல்

உடையவருடைய நியமனமும் பெற்ற (விடைபெற்ற) ஆழ்வான் உடையவர் திருவடிகளிலே வேரற்ற மரம் போல் விழுந்து கிடந்தார். உடையவர், தன் இரண்டு கைகளாலும் ஆழ்வானை வாரி எடுத்தார். ஆழ்வான் எழுந்திருந்து உடையவர் திருவடித் தாமரைகளைத் தம் திருக்கண்களிலும், திருமார்பிலும் ஒற்றிக் கொண்டார். ஸ்ரீபாததீர்த்தமும் பெற்றுக் கொண்டார் (ஸ்ரீபாத தீர்த்தம் என்பது, தீர்த்தத்தை எடுத்து ஆசார்யன் திருவடிகளை விளக்கி அந்த திருப்பாத தீர்த்தத்தை உட்கொள்வது). குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமானுஜாய நம:'' என்கிற அற்புதமான இராமாநுச நாமம் அதையும் சொல்லிக் கொண்டே பிரிந்தாக வேண்டுமே? இந்த பிரிகிற நிலையும் வந்து சேர, இராமாநுசர் ஸ்ரீமடத்திற்கு செல்ல வேண்டுமே? இராமாநுசரோ போக மாட்டேன் என்கிறார். ஆழ்வானையே பார்த்துக் கொண்டிருக்கிறார், என்ன நடந்துவிடுமோ என்ற பயத்தோடே உடையவர் நிற்க, ஆழ்வான் அவரைப் பார்த்து "நம்முடைய குடிசைக்கு தேவரீர் எழுந்தருளி நேரம் ஆகி விட்டது, நீர் ஒரு வீட்டு வாசலில் நின்றது கிடையாது, எங்கேயும் நிற்க மாட்டீர், அந்த அவப்பெயர் வரக்கூடாது. தேவரீர் ஸ்ரீமடத்திற்கு எழுந்தருளும்'' என்றார். இராமாநுசர் போகிறார், வருகிறார், போகிறார், வருகிறார், இப்படியே வாசலில் வந்தார். கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறார் உடையவர். இந்த உயர்ந்த சிஷ்யனை விட்டு பிரியப்போகிறோமே என்ற அபார வருத்தத்தோடே, ஓர் நாயகனைப் பிரிய முடியாத நாயகி எப்படி வழி அனுப்புவாளோ, அதே போல் கூரத்தாழ்வான் வாசலில் வந்து நிற்க, எம்பெருமானார் தெருவில் நடந்து சென்று கொண்டிருக்கிறார். திரும்பித் திரும்பி பார்த்துக் கொண்டே செல்கிறார். ஆழ்வானுக்கு என்ன நடக்குமோ என்று நினைத்துக் கொண்டே ஸ்ரீமடத்திற்குச் சென்று கண்களை மூடிக் கொண்டு நம்பெருமாளை நினைத்துக் கொண்டே எம்பெருமானார் வீற்றிருந்தார்.

ஆழ்வான் வீட்டின் உள்ளே வந்து சேர்ந்தார். தன் மனைவி ஆண்டாளைப் பார்த்து, "நான் சென்று நம்பெருமாளிடம் திருநாட்டுக்குச் செல்வதற்கு விடை பெற்றுவந்தேன். இராமாநுசரின் திருவடி பலத்தாலே மோக்ஷத்தையும் பெறப்போகிறேன். நீ என்ன

நினைத்திருக்கிறாய்? உனக்கு ஏதாவது வேறு எண்ணம் உண்டா?'' என்று கேட்டார். அவளும், மற்றவர்களைப் போல் சாதாரணப் பெண்ணாக இருந்தால் என்ன சொல்லுவாள்? நம் கணவன் நம்மை விட்டுப் பிரிந்து சென்று விடப்போகிறாரே! என்று வருத்தப்பட்டிருப்பாள். ஆனால், ஆண்டாளுக்கு இருந்த வைராக்யம் (உலகப் பற்றின்மை) ஆழ்வானுக்கு இருந்த வைராக்யத்தை விட நூறு மடங்கு பெரியது. ஆண்டாள் ஆழ்வானைப் பார்த்து, "ஸ்வாமி! தேவரீர் செய்தது சரி தான். மோக்ஷத்தைத் தேவரீர் பெற்றாக வேண்டும். இராமாநுசரின் திருவடி பலம் இருந்தால் மோக்ஷம் பெறுவது நிச்சயம் என்று உலகத்திற்கு தேவரீர் தான் எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும். இதை விட மேலாக, தேவரீர் திருவுள்ளத்தைப் பின் செல்வதைவிட எனக்கு வேறொரு நினைவு உண்டா! நீர் நினைப்பதையும், சொல்வதையும் செய்வதையும் ஏற்று நடப்பவள் அல்லவா நான்?'' என்று பதில் கூறினாள். ஆழ்வானின் திருவடிகளில் விழுந்து வணங்கினாள். ஆழ்வான், தன் குமாரர்களான பட்டரையும் சீராமப்பிள்ளையையும் அழைத்தார். அவர்களைப் பார்த்து "பெருமாளும், நாச்சியாரும் எழுந்தருளியிருக்க உங்களுக்கு ஒரு குறையுமில்லை. நம்பெருமாள் பிரஸாதத்தால் ஆழ்வானின் குமாரர்களாகப் பிறந்தோம் என்றும், நம்பெருமாளாலே அபிமான புத்திரர்களாக வளர்க்கப் பட்டோம் என்றும், ஒரு நாளும் இறுமாப்புடன் இருந்து விடாதீர்கள். அவ்வாறு நினைத்தால் அப்பொழுதே எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் அறுந்து போகும். உங்களுக்கு மோக்ஷம் கிடைக்கப் போவதே இராமாநுசர் திருவடி ஸம்பந்தத்தாலே மட்டும் தான் என்று நினைத்திருக்க வேண்டுமே தவிர, ஆழ்வானின் பிள்ளை என்றோ, நம்பெருமாளால் தாங்கப் பட்டவர்கள் என்றோ நினைக்க வேண்டாம். மேலும் '**எம்பெருமானார் திருவடிகளே சரணம்**' என்று இருங்கள். ஆண்டாள் முகம் கோணாமல் நடந்து கொள்ளுங்கள். பாகவதர்களிடம் மனத்தாலும் சொல்லாலும், செயலாலும் அபசாரப் படாமல் (மனம் நோகும் படி நடக்காமல்) அவர்களை அநுவர்த்தித்துக் கொண்டு (சொற்படி/நினைக்கிறபடி நடந்து) கொள்ளவும்'' என்று உபதேசித்தார்.

குமாரர்கள் இருவரும் அழுதுகொண்டே ஆழ்வானின் திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். அவர்களை எடுத்துத் தன்திருக்கைகளாலே கண்ணீரைத் துடைத்து "நீங்கள் ப்ராக்ருத (உலகப் பொருள்களில் உள்ள) ஸம்பந்தத்தை (தொடர்பை) நினைத்து வருந்தினால்,உடையவர் திருவடி ஸம்பந்தத்தை அவதூறு சொல்லுபவர்கள் ஆவீர்கள். அதுவே, ஆத்ம ஸம்பந்தத்தை (உம்முடைய ஆத்மாக்களுக்கும், என்னுடைய ஆத்மாவிற்கும் உள்ள தொடர்பை) நினைத்து வருத்தப்பட்டால் நம்முடைய உறவை அறியாதவர்கள் ஆவீர்'' என்று அவர்களைத் தேற்றினார். பிறகு, ஏற்கனவே தான் திருத்திப் பணி கொண்ட பிள்ளைப்பிள்ளையாழ்வானை அழைத்தார். கோயிலுக்கு நேரே பிள்ளைப்பிள்ளைஆழ்வான் மடியிலே தன் தலையை வைத்துக்கொண்டார். ஆண்டாளின் மடியில் திருவடிகளையும் வைத்துக் கொண்டு (குமாரர்களின் மடியில் வைத்துக் கொண்டார் என்றும் சிலர் சொல்லுவார்கள்) ஆழ்வார், ஆளவந்தார், உடையவர்,

திருவடிகளைச் சிந்தை செய்து கொண்டே, மோக்ஷ ஸாம்ராஜ்யமான பரமபதத்தை அடைந்தார். பிறகு எம்பெருமானார் எழுந்தருளி பட்டரைக் கொண்டு சரம கைங்கர்யங்களை முறைப்படி நன்றாகச் செய்து வைத்தார். ஆழ்வானின் பிரிவை ஆற்ற முடியாமல் முற்றும் துறந்து பற்றற்ற எம்பெருமானாரே அழுது அரற்றினார் என்பது ஸம்ப்ரதாயம்.

இப்படி நடந்திருக்க அப்பன் என்ற ஒருவர் ஆழ்வான் திருவடிகளைப் பற்றி உய்ய வேண்டும் என்று ஓடோடி வந்தார். ஆனால் அவர் வருவதற்கு முன்னரே ஆழ்வான் பரமபதம் அடைந்தார். அப்பன் அழ ஆரம்பித்தார். பட்டரைப் பார்த்து "ஐயகோ! கூரத்தாழ்வான் திருவடிகளை பிடிக்க வேண்டும் என்று எல்லாவற்றையும் துறந்து வந்தேனே! அவர் இப்பொழுது இல்லையே" என்று கதறினார். உடனே பட்டர் அவரைப் பார்த்து, "எப்பொழுது நீர் எலலாவற்றையும் துறந்து ஆழ்வான் திருவடிகளே சரணம் என்று மனதில் நினைத்து அவர் இருந்த திசையை நோக்கி நான்கு அடி எடுத்து வைத்தீரோ, அப்பொழுதே மோக்ஷத்தைப் பெற்றீர். சென்று வாரும்" என்றார். இதற்கு மேல் ஒன்றும் பண்ண வேண்டியது கிடையாது. ஆழ்வான் எந்த திசையில் இருப்பாரோ (மற்றதை துறந்து), அந்த திசை நோக்கி இரண்டு அடி எடுத்து வைத்ததாலே அன்றே அவன் மோக்ஷத்தை பெறுகிறான் என்பது நம்பெருமாளின் சித்தம் என்று பராசர பட்டர் நமக்கும் காட்டிக் கொடுத்தார்.

**ஆழ்வானின் பெருமைகளைப் பேசி, நினைத்து வாசித்துக் கொண்டு இன்றளவும் நமக்காக கூரத்தாழ்வான் எழுந்தருளியிருக்கும் காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள "கூரம்" என்கிற திவ்ய தேசத்திற்குச் சென்று ஆழ்வானை சேவித்து ஆழ்வானின் ஸம்பந்தத்தையும், அருளையும் பெறுவோமாக**

**ஆழ்வானின் பெருமையைப் பறைசாற்றும் பாசுரங்கள்**

மொழியைக் கடக்கும் பெரும்புகழான் ★ வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின்★
பழியைக் கடத்தும் இராமாநுசன் புகழ்பாடியல்லா
வழியைக் கடத்தல்★ எனக்கினியாதும் வருத்தமன்றே.

*இராமாநுச நூற்றந்தாதி (7)*

**இதன் அர்த்தமாவது** - நம் வாக்கினால் சொல்லி முடிக்கமுடியாத புகழை உடையவர் ஸ்வாமி ஸ்ரீகூரத்தாழ்வான். முக்குறும்புகளையும் அறுத்தவர் கூரத்தாழ்வான். நான் சென்று கூரத்தாழ்வானின் திருவடிகளைப் பற்றியபின் இராமாநுசர் என்னுடைய பழிகளைப் போக்குகிறார். எனக்கு இனி வருத்தமில்லை என்று திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தாதியின் ஏழாவது பாசுரத்தில் விளக்குகிறார். இதற்கு முன் பாசுரத்தில், அமுதனார், "என்னுடைய மதியின்மையால் இராமாநுசரின் புகழைப் பாட ஆரம்பித்தேன்.

இது சாத்தியமில்லை'' என்று பயந்தவர், இந்த பாசுரத்தில், ''ஆழ்வான் திருவடியைப் பற்றிய எனக்கு இனி வருத்தமில்லை'' என்கிறார்.

----0----

ஸ்ரீவத்ஸ சிஹ்ந மிச்ரேப்யோ நம உக்திமதீ மஹி |
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கள ஸூத்ரதாம் ||

**இதன் அர்த்தமாவது** – த்ரயீ என்றால் வேதம். அந்த வேதத்தையே பெண்ணாக பாவித்துக் கொண்டால், அந்த பெண்ணின் கழுத்திலே மங்கள ஸூத்ரமாக (தாலிக் கயிறாக) விள்ங்முவது 'பஞ்சஸ்தவம்' ஆகும். வேதம் என்கிற பெண் எத்தனையோ ஆபரணங்களை அவளுடைய அங்கங்களிலே அணிகிறாள். கழுத்தில் சங்கிலி, இடுப்பிலே அரைச் சதங்கை, கையில் மோதிரம், தலையில் கிரீடம், சூடாமணி என ஆபரணங்களை அணிகிறாள். இதிகாசங்கள், புராணங்கள், மனு முதலான ஸ்ம்ருதி, ஆழ்வார்களின் பாசுரங்கள், ஆசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திகள் (ஸ்தோத்ரங்கள்) இவை எல்லாம் ஆபரணங்கள் தான். அதாவது, வேதம் என்கிற பெண்ணுக்கு இதிகாச புராணங்கள் தான் தலையில் அணியும் கிரீடத்திற்கு ஒப்பாகும் என கூறலாம். அதுபோல், ஒவ்வொன்றும் ஒரு ஆபரணமாக உருவகப்படுத்திக் கொள்ளலாம். இது போன்ற பல ஆபரணங்கள் இருப்பினும், 'மங்களஸூத்ரம்' (திருமாங்கல்யம்) தான் மிக அவசியமானது. அதுதான் ஸ்வாமி ஸ்ரீகூரத்தாழ்வான் அருளிச்செய்த ''பஞ்சஸ்தவம்''. அதாவது, ''ஸ்ரீவத்ஸாங்கர்'' என்று பெயருடைய ஸ்வாமி ஸ்ரீகூரத்தாழ்வானின் பஞ்சஸ்தவங்கள், வேதம் என்கிற பெண்ணுக்கு தாலிக் கயிறாக இருக்கும் என்றால், அந்த ஸ்தோத்ரங்களின் பெருமையை நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது.

----0----

## ஆழ்வான் வைபவ நிகமநம் (முடிவுரை)

இங்ஙனே பரமபதத்தை அடைந்து விட்ட பிறகும் அர்ச்சாவதாரத் திருமேனியோடு, கூரத்தாழ்வான் இவ்வுலகில் பல கோயில்களில், குறிப்பாக ஆழ்வானின் அவதார ஸ்தலமான ''**கூரம்**'' என்கிற திவ்யதேசத்தில் கூரத்தாழ்வான் ஸந்நிதியில் எழுந்தருளியுள்ளார். நாம் அனைவரும் அவர் வாழ்ந்த காலத்தில் அவரை சேவிக்க பாக்கியம் பெறவில்லை. ஆனால் இன்று அவருடைய ஸந்நிதிக்குச் சென்று அவரைக் கண்ணாரக் கண்டு களிக்கும் பாக்கியம் பெற்றுள்ளோம். ஆழ்வானை சேவித்து ஆழ்வான் அருள் பெறுவோமாக!

இங்ஙனம் ஸ்ரீகூரத்தாழ்வான் வைபவம் முற்றுப் பெற்றது.

**ஸ்ரீ கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம் !**

## ஸ்ரீகூரத்தாழ்வான் வாழித்திருநாமம்

சீராரும் திருப்பதிகள் சிறக்க வந்தோன் வாழியே
தென்னரங்கர் சீரருளைச் சேருமவன் வாழியே
பாராரும் எதிராசர் பதம் பணிந்தோன் வாழியே
பாடியத்தின் உட்பொருளைப் பகருமவன் வாழியே
நாராயணன் சமயம் நாட்டினான் வாழியே
நாலூரான் தனக்கு முத்தி நல்கினான் வாழியே
ஏராரும் தையில் அத்தத்திங்குதித்தான் வாழியே
எழில் கூரத்தாழ்வான்தன் இணையடிகள் வாழியே

----0----

பொருள் விரிக்கும் எதிராசர் பொன்னடியோன் வாழியே
பொன்வட்டில் தனையெறிந்த புகழுடையோன் வாழியே
மருள்விரிக்கும் முக்குறும்பை மாற்றவந்தோன் வாழியே
மயர்வறவே மெய்ஞ்ஞானம் விளங்கிடுவோன் வாழியே
இருள் விரிக்கும் சிவமிரட்டுஎழுத்திட்டான் வாழியே
ஏதமறவெவ்வுயிர்க்கும் இதமளித்தோன் வாழியே
அருள் விரிக்கும் அரங்கத்தான் அடியிணையோன் வாழியே
அழகாரும் கூரத்தாழ்வான்தன் அடியிணைகள் வாழியே

----0----

மட்ட விழும் பொழில் சூழ் குருகேசர் மறைத்தமிழ் வாழ்ந்திடுநாள்
மண்ணுலகில் ஸ்ரீ பாஷ்யம் விளங்கிடவந்து பிறந்தவர் நாள்
எட்டுமிரண்டும் இசைந்த ச்லோகமிசைத்திட வந்தவர் நாள்
இல்லை யெனச் சிவமென்றெதிரிட்டு எழுத்திட வந்தவர் நாள்
துட்டகுதிர்ட்டிகள் மாயிகள் வாழ்வை துணித்திட வந்தவர் நாள்
சூரிய பூமி யாரியரென்று துதித்திட வந்தவர் நாள்
அட்டதிசைக்கும் நிறைந்த பெரும்புகழ் அந்தணர் வாழ்
கூரத்தாழ்வான் வந்தருளிய நாள்
தையில் விளங்கிடும் அத்தமது நன்னாளே

----0----

ஸ்ரீ வத்ஸ சிஹ்ந மிச்ரேப்யோ நம உக்திமதீ மஹி |
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கள ஸூத்ரதாம் ||

----0----

ஸ்ரீ பராசர பட்டார்ய: ஸ்ரீரங்கேச புரோஹித: |
ஸ்ரீவத் ஸாங்க ஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸேமேஸ்து பூயஸே ||

----0----

## ஸ்ரீ கூரத்தாழ்வான் திருமஞ்சனக் கட்டியம்

(1) அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய பூர்வே
மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகாமுக்தி மாபு: |
ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீய முக்திம் கரஸ்தாம்
யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத: ||

(2) காஷாய சோபி கமநீய சிகாநிவேசம்
தண்டத்ரயோஜ்ஜ்வல கரம் விமலோபவீதம் |
உத்யத் திநேச நிபமுல்லஸத் ஊர்த்வ புண்ட்ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ! த்ருசோர் மமாக்ரே ||

**ஜயவிஜயீபவ!!!**

----0----

1) யதிராஜவேஷத்தால் க்ரிமிகண்ட சபை நடுவில் சென்று வென்ற விடாய் தீரவோ
2) எள்ளளவும் அஞ்சாமல் "த்ரோணமஸ்தி தத:பரம்" என்று எழுத்திட்ட ச்ரமம் தீரவோ
3) தர்சனத்தை உத்தரித்து தர்சனங்கட்கு அழிவின்றி வரம் பெற்ற விடாய் தீரவோ
4) தயையுடனே நாலூரான் பிழைபொறுத்து தன் கதியை அவர்க் களித்த ச்ரமம் தீரவோ
5) கூரேச விஜயத்தால் குதுர்ட்டிகளை குடியோட்டி வெற்றிபெற்ற வேர்வை யாரவோ
6) குலகுருவாம் எதிராசர் விரகத்தால் நெடுங்காலம் நொந்திருந்த இளைப்பாறவோ
7) ஸ்ரீ பாஷ்யமிடும்போது ப்ரஹ்மஸூத்ர வ்ருத்தியெல்லாம் தரித்துரைத்த விடாய் தீரவோ
8) ச்ரிய: பதியின் சேஷத்வம் ஜீவாத்ம லக்ஷணமென்றறிவித்த விடாய் தீரவோ
9) ஸ்ரீ கூரகுல ப்ரபவ தர்சனஸ்தாபனாசார்ய! ஸ்ரீ கூரநகர் தழைக்கவே! ஜகமேழும் குளிர நின்று திருமஞ்சனம் க(கொ)ண்டருளவே!

**ஜயவிஜயீபவ!!!**

----0----